லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, $5\frac{1}{2}$ அணா.
பழைய பிரதி, 6 „

சந்தாவின் விவரம்,
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு „ 2-2.




அறிவைப்பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 10.] 1901ஹு நவம்பர்மீ [இலக்கம் 7.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy $7\frac{1}{2}$ As.: Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *7s. 6d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People:—

SUBSCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. $5\frac{1}{2}$ AS.; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *5s. 6d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறுமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

READINGS AT HOME.

A GLIMPSE INTO THE FUTURE.

## தமயந்தி.

19-ம் நாள் படிப்பு.

பத்தொன்பதாம் நாளில் ருக்மணி அம்மாளும் பெண்களும் கைலாசத் தாத்தாவும் வழக்கம்போலப் போஜனம் முடித்துக் கொண்டு கதையைக் கேட்பதற்கு வந்துட்கார்ந்தார்கள். சுப்பலக்ஷ்மி பின்வருமாறு படிக்கத் தொடங்கினாள்.

"இவ்வாறு பிராமணன்வந்துசொல்லிய அளவில், தமயந்தி சந்தோஷித்து, அவளுக்கு வேண்டிய பொன்னும் பூணும் பரிசாகக் கொடுத்து, அவரை நோக்கிச் சொல்லுகின்றாள். "ஓ அந்தணர் பெருமானே நீ எனக்காக எவ்வளவோ சிரமப்பட்டாய். ஆயினும் இன்னொருகாலம் அயோத்திக்குச் சென்று ஒரு சமாசாரம் அவ்விருதுபன்ன மஹாராஜனுக்குச் சொல்லி வரவேண்டும். அதாவது "ஓ அரசனே தமயந்தியானவள் தெய்வீகத்தால் நங்கைப்பருவம் நீங்கி கன்னிப்பருவத்தை அடைந்தனளாகி மறுபடியும் சுயம்வரத்தை வேண்டலின், அநேக அரசர்கள் குண்டினபுரத்தில் வந்திருக்கின்றனர். விவாக முகூர்த்தம்நாளைக்கே வைத்திருக்கின்றனர்." நீயும் வேண்டுமானாற் போகலாம் என்று கூறிப் பின்னும், "பாவம் அந் நளமஹாராஜா உயிரோடிருக்கின்றானோ இறந்துவிட்டானோ? பட்டகாலிலே படும், கெட்டகுடியே கெடுமென்றவாறு இவ்வளவு துயரமும் போதாதா? மனைவியையும் முற்ற இழக்கும்படியான காலம் வந்ததே" என்றும் சொல்லிவருக என்று அனுப்பினள். அவ் வேதியனும் அவ்வாறே சென்று அயோத்திமன்னனோடு கூற, அவன் மிக்க மகிழ்வடைந்து தன் பாகனை நோக்கி, "ஏ வாகுக, கேட்டாயோ, நாளைத்தினம் தமயந்திக்குச் சுயம்வரமாம். மன்னரெல்லாரும் குண்டினபுரத்தில் வந்து குழுமியிருக்கின்றார்களாம். யானும் போகக்கருதுகின்றேன். உனக்குக் குதிரையின் உள்ளம் தேர்ந்து தேர் செலுத்தத் தெரிவதுண்மையாயின், எங்கே, செலுத்துபார்ப்போம். இதில் தான் உன்னுடைய திறமையைக் காணவேண்டும்" என்றனன். அதுகேட்டு வாகுகன் "அங்ஙனமே ஆகுக" என்று பின்பு தனக்குள்ளே சிந்திப்பானாயினன். "ஏது! விபரீதம் ஆயிற்றே! யான் நங்கையை நள்ளிரவில் நடுக்காட்டில் விட்டது கொடுமையே ஆயினும், கற்பிற்றிறம்பாத என் காதலி இவ்வொரு குற்றத்துக்காக என்னைக் கைவிடுக்க வுன்னுவாளோ? கடல் மறிந்து கரை புரண்டாலும், கதிரவன் கதி மாறினாலும், கற்புடையார் சிந்தை கலங்குமோ?" என்று பலவாறு யோசித்துப் பின்பு "இஃது என்னைத் தன்னிடத்துத் தருவிக்கும் பொருட்டு அவள் செய்த ஓர் உபாயமேயன்றி வேறல்ல" என்று துணிந்துகொண்டனன். பின்பு அவன் உத்தமகுணமுள்ளனவாகத் தெரிந்தெடுத்த சிறந்த அசுவங்களைத் தேரிற் பூட்டி அரசன் முன்பாகக் கொண்டுவந்து, "ஏ ராஜன், ஏறுக தேரில் இன்று அத்தமனத்துக்குள்ளாக யானுன்னை விதர்ப்பராஜன் பட்டணத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கின்றேன் பாரெனது திறமையை" என்றான். அரசனும் சர்வாலங்கிருத பூஷணாகி பாலசூரியன் போல அத்தேர்மேலேறி வீற்றிருக்க வாகுகன் அருகு நின்றவர் யாவரும் அற்புதம் அற்புதம் என்று கொண்டாட அதிவேகமாகத் தேரைச் செலுத்திச் சென்றான். அவ்வாறு புரவிகள் களைப்பினாற் சற்றே வருந்தல்கண்டு, வாகுகன் தனக்கு முனிவர்கள் உபதேசித்துள்ள மந்திரத்தை அவற்றின் காதிலோத, அவை அ
திர மகிமையாலே களைப்பும் வருத்தமும்
முன்னிலும் அதிவேகமாக ஓடிச்செ
விதர்ப்பநாட்டை யடைந்தன. அவ்வா
தேர் செலுத்தும் திறமையை நோக்கி அ
ருதுபன்னன் ஆகா! இவன் அசுவங்களின் உ
ளக்குறிப்பை யறிந்து செலுத்துதலில் சா

கோத்திர னென்னும் முனிவரனோ, அல்லது தேவேந்திரன் சாரதியாகிய மாவலி யென்பானோ, அல்லது இவ்வித்தையை முனிவர்பாற் கற்றுள்ள நளமகாராஜன் தானிவ்வுருவு கொண்டுவந்தானோ, யாவனோ தெரிந்த தில்லையே, அற்புதம் அற்புதம் என்று சொல்லித் தலையசைத்து வியந்தனன். அப்போது, அவன் தோள்மேற்றரித்திருந்த உத்தரீயம் அவ்வழியில் நழுவி விழுந்துவிட அவன் பாகனைநோக்கி "ஏ பாக, தேரை நிறுத்துக, உத்தரீயம் கீழே விழுந்துவிட்டது" என்று இரண்டு சொல் சொல்லு முன்னமே என்ன ஆச்சரியம்! "தேர் பத்துயோசனை தாண்டிவிட்டதே" யென்று வாகுகன்விடை பகர்ந்தனன். பின்பு சிறிதுதூரம் செல்லுகையில் ஆங்கோர் தான்றிமரம் தோன்ற அரசன் தேரினை நிறுத்தச்சொல்லி வாகுகனை நோக்கி ஏ வாகுக, நீ உன் திறமையை ஒரு விஷயத்திற் காட்டினாய். யானும் என்றிறத்தை இன்னொரு விஷயத்தில் காட்டட்டுமோ" என்று "பார் இங்கு நின்றபடியே சொல்லுகின்றேன், இம்மரத்தில் உள்ள இலைகளும் கனிகளுமாய் மூன்று கோடியே முப்பத்திரண்டுள்ளன. வேண்டுமாயின் சோதனைசெய்துகொள்" என்றனன். நளனும் அவ்வாறே எண்ணி நோக்கி அத்தொகை சரியா யிருக்கக்கண்டு பெருவியப்புற்றனன். பின்பு இருவரும் தத்தம்வித்தைகளை ஒருவர்க்கொருவர் மாற்றிக்கொள்ள அந்த க்ஷணமே நளனைப்பற்றியிருந்த கொடுங்கலி அவனைவிட்டு நீங்கி, நெடுநாளாகத் தன்னைச் சுட்டெரித்து வருத்திக்கொண்டிருந்ததாகிய பாம்பின்விடத்தை உமிழ்ந்து தானும் தன்துயரம் நீங்கினன், அப்போது நளன் தன்னை நெடுநாளாகப் பிடித்துவருத்திய அக்கலியைச் சபிக்கக் கருதிவாயெடுக்க, அக்கலி அதுகண்டு "ஐய சினங்கொள்ளற்க. யான் தமயந்தியின் சாபத்தால் பாம்பின் விடமுண்டு இத்தனைநாளும் பட்ட துயரம் போதுமானது. இனியும் என்னைத் துயரில் வீழ்த்தற்க, இனி நான் உன் பேரை உரைத்தபேரையும் அணுகேன்" என்று வேண்டிக்கொள்ள அரசனும் கோபம் தணிந்தனன்.

சிவகாமி.—நளனுடைய சாரத்தியமும் இருதுபன்னனுடைய கணக்கில் வன்மையும் ஏதும் நம்பத்தக்கவையா யிருக்கவில்லையே! ஒரு யோசனைக்குத் தற்காலக் கணக்குப்படி மூன்று மைல் வைத்துக்கொண்டாலும் பத்துயோசனை அதாவது முப்பது மைல் ஒரு கணத்திற் சென்றதாகிறதே. தற்காலத்தில் அற்புதமாக எண்ணப்படுவதும் அதிவேகமாகச் செல்லுவதுமான ரயில்வண்டிகூட மினிட்டுக்கு ஒரு மைலுக்கு மேலே செல்லாதே. குதிரைவேகம் ரயில் வேகத்தைவிட அதிகமாகுமா? இருதுபன்னன் கணக்குப்பண்ணினதோ இதிலும் ஆச்சரியமா யிருக்கின்றதே.

தாயார்.—இவர்கள் மற்றவர்களைப்போலக் குதிரைகளைச் சாட்டையின் பலத்தால் செலுத்தினதாகவும் இலைகளையும் கனிகளையும் ஒவ்வொன்றாக எண்ணிக் கணக்கிட்டதாகவும் சொல்லவில்லையே. மந்திரசத்தியினாலே செய்ததாக வல்லவோ சொல்லியிருக்கின்றது. மந்திரங்களை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் இவை உண்மையென்றே ஒப்பலாகும்.

தாத்தா—அதென்ன அப்படிச் சொல்லுகின்றாயே, மந்திரங்கள்ஆனாற் பொய்யாகுமோ? அதர்வணவேதம் முழுதும் மந்திரசாஸ்திரமே யன்றோ? இக்காலத்திற் பார்ப்பாரில்லாமையாலே, கடன் கேளாமற்கெட்டது, பயிர் பாராமல் கெட்டது; நூல் ஆராயாமற் கெட்டது என்று எல்லாம் இறந்துபோயின. ஆயினும் பெருங்காயம்வைத்த செப்புப்போலச் சிற்சில மந்திரங்கள் இந்நாளிலும் இருக்கின்றன. பாம்பு தேள் முதலியவற்றின் விஷங்களை மந்திரத்தால் இறக்குகின்றார்கள். இது பிரத்தியக்ஷமே. இன்னும், பில்லி

சூனிய மந்திரங்களும் குட்டிச்சாத்தன் மந்திரங்களும் பொய்யென்று சொல்லுதற் கிடமில்லை. சிற்சில வியாதிகளுக்கும் மந்திரங்கள் பலிக்கின்றன.

ருக்மணி.—சரி, மந்திரங்கள் உண்மையென்றே வைத்துக்கொள்வோம். மந்திரங்களில் நம்பிக்கையில்லாவிடினும் கூட இவர்களது சத்தியை, ஒன்றைப் பத்தாகச் சொல்லுதல் காவியங்களில் வழக்கமாதலின், அவ்வாறு அதிகப்படுத்திச் சொன்னதாகவும் வைத்துக்கொள்ளலாம். இத்தகைய அதிசயாலங்காரங்கள் நைடதத்தில் எடுத்த இடமெல்லாம் காணப்படும். ஒருவனை நோக்கி இவன் யானையைக் கூட வாலைப்பிடித்துக் கரகரவென்றிழுக்கவல்லவன் என்றால் எப்படி மிக்க பலிஷ்டனென்று மாத்திரம் கொள்ள வேண்டுமோ அவ்வாறே நளன் சாரத்தியத்திலும் இருதுபன்னன் கணக்குப் பண்ணினதிலும் மிக்க சாமர்த்தியமுள்ளவர்களென்றுமாத்திரம் கொண்டாற் போதுமானது.

தாத்.—தமயந்திக்கு மறுபடியும் சுயம்வரம் நடப்பதென்பதை இருதுபன்னன் கேட்டபோது யாதும் ஆசங்கியாமல் அச்செய்தியைநம்பிச் சுயம்வரத்துக்குச் செல்லப் புறப்பட்டமையாலும், நளனும் கூடக் கற்புடையாள் இதனைக் கருதுவாளா மாட்டாளென்று மட்டும் கொண்டமையாலும், அக்காலத்தில் ஸ்திரீகளுக்குப் புனர்விவாகம் ஆசாரணையாயிருந்ததென்றும் பிற்காலத்தில் அவ்வாசாரம் பல காரணங்களால் விடுக்கப்பட்டதென்றும் சிலர் சொல்லுகின்றார்களே. உன்னுடைய அபிப்பிராயம் என்ன. புனர்விவாகம் சாஸ்திரீயம் ஆகுமா?

ருக்மணி.—என்னைக் கேட்கிறீரே! நான்தானா சாஸ்திரத்தையும் சம்பிரதாயத்தையும் கண்டேன்? ஆயினும், இந்துக்களுக்குள் ஸ்திரீகளுக்குப் புனர்விவாகம் இக்காலத்தில் ஏற்படுத்த முயன்றுவருகிறார்களேயன்றி அது முற்காலத்தில் ஏற்பட்டிருந்ததாகத் தோன்றவில்லை. மனுஸ்மிருதி முதலான பழைய நூல்களிலும் அது மறுக்கப்பட்டிருக்கிறது. தமயந்தி விஷயத்தைக்கொண்டு அது அந்நாளில் ஆசாரமாயிருந்ததென்பது கூடாது. ஆயினும் தமயந்தி தெய்விகத்தால் மீட்டும் கன்னிப்பருவம் அடைந்தாளென்றும் அதனால் அவள் மறுபடியும் சுயம்வரம் வேண்டினாளென்றும் சொல்லியிருத்தலால், கன்னிப்பருவம் கடக்குமுன் கணவனையிழந்தவர்களுக்குப் புனர்விவாகம் கூடுமென்றும் மற்றவர்க்குக் கூடாதென்றும் குறிப்பாகத் தோன்றும். இதுவே சாஸ்திர சம்மதமாகவும் எனக்குத் தோன்றுகின்றது. இந்நாளில் சாஸ்திரத்தை யாவர் நம்புகிறார்கள். யாவர் அநுஷ்டிக்கிறார்கள். நாலுபேர் வைத்ததுதான் சட்டம். நிற்க. மேலே வாசி சுப்பு.

பின்பு நளமகாராஜன் தேரைச் செலுத்திக்கொண்டு இருதுபன்னனுடன் குண்டினபுரத்தைச் சார்தலும், அத்தேரொலியைக் கேட்டமாத்திரத்தில் தமயந்தி, "இவ்வாறு தேர் நடத்தவல்லவர் என் காதலனேயன்றி வேறுலகத்துண்டோ? இவன் என் மணமகனேயல்லாவிடின் இனி யான் உயிரோடு வாழ்தலில்லை" யென்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டனள். இருதுபன்னனும் அரண்மனை வாயிலில் தேரோடு பாகனை நிறுத்திவிட்டு, உள்ளே சென்று வீமராஜனைக்கண்டு, ஒருவர்க்கொருவர் செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்துகொண்டபின், வீமன் அவனைநோக்கி, "நீ இங்குவந்த காரணம்யாது?" என்று கேட்கவும், அவன் உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பாத்திபோல ஒன்றும் சொல்லானாகி "ஒன்றும் விசேஷமில்லை, உன்னைக்கண்டு போகலாமென்றுதான் வந்தேன்" என்றனன். அரசனும் சந்தோஷித்து அவனோடு சிறிது

நேரம் இனிமையாகச் சம்பாஷித்திருந்து, பின்பு, தன் பரிசனரைநோக்கி, "இவ்வரசனுக்கோர் விடுதியமைக்க," வென்று கட்டளையிட அவர்களும் அவ்வாறே செய்தனர். இருதுபன்னனும் அவ்விடுதியிற் சென்று "ஏது நாம் முழுமோசம் போய்விட்டோமே! தமயந்திக்குச் சுயம்வரமாயின். இங்கு அரசர் ஒருவரையும் காணோமே, வீமனும் நம்மை எங்கு வந்தாயென்று கேட்க நியாயமில்லையே. அந்தணன் சொன்னது பொய்யோ மெய்யோ தெரிந்ததில்லையே" யென்று எண்ணமிட்டுக்கொண்டிருந்தனன்.

இது நிற்கத், தமயந்தி தன் தோழியை நோக்கி, "சகியே நீ சென்று இங்கு வந்திருக்கும் அரசன் யாவன்? அவன் தேரைச் செலுத்திவந்த சாரதி எனது பிராணநாயகன் தானோ நீ சென்று விவரம் அறிந்து வா" வென்று விடுத்தனள். அவளும் சென்று வாகுகனைக்கண்டு நீ யாவன். எந்தத்தொழில்களில் வல்லவன் இங்கு வருதற்குக் காரணம் யாது?" என்று கேட்க வாகுகனும் சொல்லுவான்: "ஈங்குவந்த மன்னவன் அயோத்திராஜாவாகிய இருதுபன்ன மகாராஜா. இவன் தமயந்தியின் சுயம்வரத்துக்காக இங்கு வந்திருக்கின்றனன். நான் அவன் தேர்ப்பாகன். என் பேர் வாகுகனென்பார்கள். தேர் செலுத்தலன்றியும் அழலில்லாமல் சமைக்கவும் கீரில்லாப்பாலைவனத்தும் தண்ணீர் வருவிக்கவும் வல்லேன்." என்றனன். அதுகேட்டுத் தோழி "இவ்வித்தைகள் நளமகாராஜனுக்கேயன்றி வேறொருவர்க்கும் தெரியாதே. நீ அவனால் உபதேசிக்கப்பெற்றனை போலும். ஆதலின் அந்நளன் ஏங்கேயிருக்கின்றான் சொல்லவேண்டும்" என்றனள். அதற்கு வாகுகன், "நானிவ்வித்தைகளை ஒருவரிடத்தும் கற்றேனல்லன். அந்நளமகாராஜா எங்கிருக்கின்றானோ அதுவும் அறியேன். நிற்க. இங்கு தமயந்திக்குச் சுயம்வரமென்று செய்தி வந்ததே. கற்பின் மிக்க காரிகையார்கள் தம்மைக் காதலர் துறந்து கைவிட்டபோதிலும் மற்றொரு புருடரை விவாகம்செய்துகொள்ள மனத்தாலும் எண்ணுவார்களோ! தமயந்தி கற்பைக் கைநழுவவிட்டதென்னே" வென்றனன். அம்மொழிகளைக்கேட்டுத் தோழி தமயந்தியிடம் மீண்டும்சென்று அம்மா! அவ்வாகுகன் உருவம் ஒன்றுதவிர மற்றுப்பேச்சு வார்த்தைகள் குணம் குறிகள் எல்லாவற்றிலும் நளனையே முற்றிலும் ஒத்திருக்கின்றான்" என்றனள். தமயந்தி இன்னமும் பரிசோதிக்க நினைந்து தன் தோழியிடம் கொஞ்சம் அரிசியைக்கொடுத்து "இதை அவ்வாகுகனிடம் கொடுத்து நெருப்பில்லாமற் சமைக்கச்சொல்லிப்பார்" என்றனுப்பினள். அவளும் அவ்வாறே கொடுக்க அதைவாங்கி வாகுகன் தன் கையால் தொட்டமாத்திரத்தில் அது அடிசிலாக அமைந்தது. தோழியும் அவ்விசித்திரத்தைத் தமயந்தியினிடம் கூறினள். தமயந்தி இப்பரிக்ஷை செய்தபிறகு வந்திருப்பவன் தன் நாயகனே யென்று மகிழ்ந்து, பின்னும் தன் குழந்தைகள் இருவரையும் அவனிடத்தில் கூட்டி யனுப்பினள். அனுப்பிய மைந்தர்களை அரசன் காண்டலும் அழலிலிட்ட மெழுகு போல் மனமுருகி இரு கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையா யொழுக அழுதுவருந்தினன். ஆ! ஆ! மக்கள்மேல்வைத்த வாஞ்சையை ஒழிக்கவல்லாரெவர்? ஆன்மாவை அநாதியாகத் தொடர்ந்து நின்ற ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களையும் வேரோடறுத்து, ஜனனசாகரத்தைக் கடந்து கரையேறிய ஜீவன்முக்தர்க்கேனும் தம் மக்கள்மேல்வைத்த காதலை ஒழிக்கற்பாலதோ? நளன் வருந்தியது என்ன ஆச்சரியம்? நிற்க. இவ்வாறு தான்கண்ட செய்திகளைத் தோழி சென்று தமயந்தியோடு சொன்ன அளவில் இவன் நமது நாயகனே யென்பதில் ஐயமில்லையென்று துணிந்து அவ்விவரங்களைத் தன் தாய் தந்தையருக்குச்சொல்லித் தந்தையின் பணியால்வேந்தனை அழைத்துவரும்படித்தோழிக்குச்சொல்லி யனுப்பினள். தோழிபோய்ச் சொல்ல அரசனும் தமயந்தியிடத்தே சார்ந்தனன்.

சிவகாமி.—அம்மாடி, ஒரு சாதி நளனும் தமயந்தியும் ஒருவரை யொருவர் கண்டு கொண்டார்கள். தமயந்தி விழித்தபேர் வழி; எப்படியோ தந்திரம்பண்ணி அவனைத் தன்னிடத்துக்குத் தருவித்துக்கொண்டது மல்லாமல் எவ்வளவு பரிசைஷபண்ணுகிறுள் அவன் தன் புருஷன்தானென்று நிச்சயித்துக்கொள்வதற்கு.

தாத்.—என்னபண்ணுவாள்! பண்டு துஷ்யந்தமகாராஜா சகுந்தலையை மறந்துபோனதுபோல நளனுக்கு உருவம் முற்றிலு மாறிப்போனபடியால் எளிதில் அவனை நளனென்று நம்பக்கூடாமற் போயிற்று. உருவமொன்ருகிச் சரியை வேருனலும் நம்புவார்கள். சரியையொன்ருயிருந்தும் உருவம் வேறுபடின் யார்தான் நம்புவார்கள்? பாம்பின்கால் பாம்புக்குத் தெரியுமென்று தமயந்தியாகக்கொண்டு குணங்குறிகளைக்கொண்டுகித்து நளனென்று நிச்சயம் பண்ணிக் கொண்டனள்; மற்று யாவர்க்குத்தெரிந்தது?

சிவகாமி—பிள்ளைகளை அனுப்பிப்பாராவிடில் நளனை அவ்வளவு சுலபத்தில் கண்டுபிடிப்பது பிரயாசமே. பிள்ளைகளைக் கண்டமாத்திரத்தில் பாவம் அவன் உறுதியும் உத்தேசமும் எல்லாம் பறந்துபோயின.

தாயார்.—ஆமாம், முத்தனையும் நீக்கி முத்தியைப்பெற்ற ஞானிகளுக்குக்கூடப் பிள்ளைகள்மேல் வைத்த ஆசை நீங்குவ தரிதுதான். "அன்புக்குமுண்டோ வடைக்குந்தாழார்வலர்—புன்கணீர் பூசல் தரும்." என்றபடி அவ்வன்பை அடக்கி மறைப்பதென்ருலாகுமா? அன்பை அடக்கக்கூடாமையின் அகப்பட்டுக் கொண்டனன்.

இனிப் போதுமானது. இத்துடன் கதையை நிறுத்திவிடுவோம்.

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

---

## Woman as Wife.

## பாரியா நிலைமையில் பெண்களுடைய தன்மை.

ஆடம்ஸ் டேவன்போர்ட் (Adam's Davenport) என்னும் பண்டிதர் ஒருவர் "பெண்களது காரியமும் கனமும்" (Woman's work and worth) என்னும் பேரால் ஒரு புத்தகம் அங்கிலேய பாஷையில் எழுதி வெளியிட்டிருக்கின்றனர். * இப்புத்தகத்தைப் பெண்களது பெருமையும் அருமையும் இன்னமும் உணராது அவர்களைக் கேவலம் சமயற்ருெழிலுக்கும் சந்ததி விருத்திக்கும் மாத்திரமே உரியவர்களாக மௌட்டிய புத்தியால் நடத்திவரும் நம்மவர் யாவரும் நன்கு ஆராய்ந்து படிக்கத்தக்கது. ஸ்திரீ தர்மங்களையும் அவர்க்கு நாம் செய்யவேண்டிய கடமைகளையும் பற்றி நாம் பலகாலும் நூல்களில் விவரிக்கக் காண்கினும், அவரது வித்தியாபிவிர்த்தி முதலிய விஷயங்களில் இன்னமும் தக்க முயற்சியெடுத்துக்கொள்ளாமலே ஏனோதானோவென்றிருக்கின்ருே மாதலின், இப்புத்தகத்தைப் படித்தாயினும் நமக்குப் புத்திவருமாயின் அது மிகவும் விரும்பத்தக்கதே.

இப்புத்தகத்தில் ஆசிரியர் பெண்கள் அடைதற்குரிய பெரும்பேறுகளையும், அவர் மேற்பொறுத்துத் தாங்குதற்குரிய பாரங்களையும், குடும்பகாரியங்களில் அவர் செலுத்தக்கூடிய செல்வாக்கையும் பற்றி விவரிக்கின்றனர். கன்னிகை, காந்தை, மாதா வென்னும்

* Reviewed in the *Indian Ladie's Magazine* for October 1901.

மூவகை நிலைமையினும் அவரது தர்மங்களை விவரித்து சரித்திரங்களிலும், காவியங்களிலும் கதைகளிலும் காண்கின்ற உத்தம குணங்களை யுடைய ஸ்திரீகளது குணாதிசயங்களையும் செய்கைகளையும் திருஷ்டாந்தமாக எடுத்துக் காட்டி யிருக்கின்றனர். இவருக்குப் பெண்களைப் புருஷனோடு சமானமாக உயர்த்தவேண்டும் என்னும் கொள்கையில்லை. ஸ்திரீகள் புத்திவன்மையிலும் நல்லொழுக்கத்திலும் புருடருக்கு எவ்வாற்றானும் தாழ்ச்சியில்லாதவர் என்பதை வற்புறுத்திப்பேசினும் புருடரால் செய்யக்கூடிய காரியங்கள் அனைத்தையும் பெண்களும் செய்யவல்லவர் என்னும் முரட்டுப்பிடி யில்லையென்றும், பெண்களுக்கடுத்த முக்கியமான கடமைகள் அவரவர் வீட்டினகத்தே உள்ளவென்றும், அவர்கள் மனோராஜ்யம்செய்து துருதுருத்தவராய்த் தமக்கு அருகமல்லாத காரியத்தில் பிரவேசியாமல் தம் முன்னிலையில் தம் காற்கீழ்க்கிடந்த தமக்குரியகாரியங்களையே செய்தல் தகுதியென்றும் தமது நூன்முகத்திற் குறித்திருக்கின்றனர்.

இந்நூலிற் சொல்லிய அநேக விஷயங்களில் 'ஸ்திரீயின் பார்யா நிலைமை' என்னும் தலைப்பில் கூறியுள்ளவற்றை மாத்திரம் இங்கு சிறிது எடுத்துக் கூறுகின்றோம். அன்பைப்பற்றிச் சொல்லுமிடத்து, அன்பில் அநேக பேதங்கள் உள்ளவென்று கூறி மனையாள் அன்பிற்கும் மாதாவின் அன்பிற்கும் உள்ளதாரதம்யத்தை வெகு இனிமையாக விவரிக்கின்றனர். "தாயின் அன்பு மகவுக்கிடையூறுவாராமல் காத்து நிற்பதும், தளர்ச்சியடையாததும் தன்னயம் பாராததும், நன்மையை எதிர்நோக்குவதும் ஆகும்; மனைவியின் நேயமும் அவ்வாறனதே. ஆயினும் அத்தாயின் நேயத்தில் தலைவியின் நேயம் வேறாகும். இருவகையான நேயமும் தன்மையில் ஒக்குமாயினும் அளவில் ஒவ்வா. அங்ஙனமாயினும் தலைவியின் அன்பு தாயின் அன்பிலும் பொறுப்பதிலேனும் முடிப்பதிலேனும் தோருவதிலேனும் குறைவுபடுமென்று கூறலாகுமோ? மனையாள் மணமகன் பொருட்டுப் பொறுக்கும் இடரினும் தாய் தன் மகவுக்காக அதிகம் பொறுக்கவல்லளோ? தாய்மார்கள் தம் பிள்ளைகளைக் காக்கும் பொருட்டு அவர்களை வெட்டவந்த கத்திமேல் வீழ்ந்து தம்பிராணனைக்கொடுத்திருத் தலை நாம் அறிவோமாயின், மனைவியர்களும் தமது உயிரிற் சிறந்த கணவரைக் காக்கும்பொருட்டு தம் உதிரம்சிந்தி உயிர்துறந்திருத்தலையும் அறியோமா? தாய்மார் தமது புத்திரர்களின் நன்றிக்கேட்டைப் பொறுத்து அவரது குற்றங்களை மறந்து மன்னித்ததாகக் கேட்டிருப்போமாயின், மனைவியர்களும் தமது கணவருடைய கோபதாபங்களைப் பொறுத்து அவரது துர்நடத்தைகளையும் சிந்தியாது, அவர்கள் தம்மைப் பேடித்தனமாய்க் கைமிஞ்சி அடிக்கினும் அதைக் கருதாது மரணபரியந்தம் அவர்களிடத்து விசுவாசம் உள்ளவர்களாய் நடந்து வந்ததையும் கேட்டதில்லையா? மணமகள் நேயமே மத்தியில் நின்று அனைத்துக்கும் ஒளி கொடுக்கும் ஆதித்தனைப்போல ஒருவேளை மற்றெல்லா நேயங்களுக்கும் காரணமாக விருப்பினும் ஆம். நமது குணத்தைத்திருத்தி எண்ணங்களையும் நடக்கையையும் சீர்திருத்துவதாகிய இந்நேயத்தின் பெருமையை எத்தனைபேர் உள்ளபடி அறிந்துகொள்ளமாட்டாமல் அற்பமாக மதிக்கின்றார்கள்!"

"புருஷனுக்கு மனையாளில்லாமல் பூர்த்தியில்லை. இவளில்லாவிடில் புருஷன் ஒன்றைச் சாதிக்கவேண்டுமென்னும் உத்தேசத்தை யிழந்து மனவியையும் ஊக்கத்தையும் ஒருங்கே கைவிடுகின்றான். நொந்து வருந்தும் மனத்தை ஆற்றுபவளும், தளர்ச்சியடையும் எண்ணங்களைத் தளிர்க்கச்செய்பவளும், தேய்ந்துமாய்ந்த ஆற்றலைப் பலப்படுத்துபவளும் ஊக்கமிழந்த சிந்தைக்கு ஊக்கம் அளிப்பவளும் எல்லாம் இத்தலைமகளே. மற்றவர் யாவரும் நம்மைக் கைவிடினும், மித்திரர்களும் சுற்றங்களும் நம்மைப்பாராமல் விலகினும் இவள் நமக்கு நீங்காத்துணையாய் நின்று நம்மிடத்து மாறாநேயமுடையவளாய் இருக்கின்ற

னள். இவளுடைய நம்பிக்கையை நாம்பெற்றி
ருக்குமளவும் நமக்கு எத்தனை கஷ்ட நிஷ்டூரங்
கள் வரினும் லக்ஷியமில்லை. இவளை நம்பி
இவள் கையில் நம்மை ஒப்பிக்க இவள்தத்த
ளித்துத் தடுமாறும் நமக்குன்றுபோல் உள். பல
உதவி நடத்துகின்றனள் நமது கஷ்டங்களா
கிய இருளில் இவள் கண்கள் நாள்மீன்போலப்
பிரகாசிக்கின்றன. காற்றலலைப்புண்டு கலங்கத
மலரானது கதிருதயத்தைக்கண்டு மலர்ச்சி
யுறுவதுபோல துயரத்தால் மெலிந்த நமது
சிந்தையும் இவளது முகமலர்ச்சியால் தளர்வு
நீங்கி மலர்ச்சியடைகின்றது. மனையாள் நேயத்
தாலுண்டாகும் இன்பம்போல அவ்வளவு நிர்
மலமானதும், அவ்வளவு நிலையானதும், புறப்
பொருள்களால் கெடுதலுறாததுமான இன்பம்
வேறில்லை."

"மாதரார் நேயத்துள் மன்னியிருப்போர்க்குப்
போதுமீ சுகம்போலப் பொற்புற்ற தியாதுளதே
வாரிதியினுள்ளே மறைந்ததிரவியமும்
நேருறுதலில்லை நிசம்."

இவ்வாறு மனைவியின் நேசத்தைச் சிறப்பித்
துப் பின்னும் சொல்லுகின்றார். "இங்ஙனம்
யாம் மனைவியின் நேயத்தைச் சிறப்பித்தது
கேவலம் ஆபூதகற்பனை யென்று கருதக்
கூடாது. அவளை அவளுக்குரிய உண்மை
நிலைமையில்வைத்து நோக்கின் அப்போதவள்
பெருமையும் அருமையும் தெரியவரும்."

மனைவியர் தமது புருடர்களுக்குச் செய்
துள்ள அன்பையும் ஆதரவையும் உதவியை
யும் விளக்குவதற்கு அநேக திருஷ்டாந்தங்
களை எடுத்துக் கூறுகின்றனர். அவையெல்
லாம் ஐரோப்பியர்களுக்குள்ளிருந்து எடுத்துக்
காட்டுதலினாலும் அப்பெயர் விவரங்கள் நம்ம
வர்கள் நன்றாக அறியாராதலினும் நாமிங்கு
விவரிக்கவில்லை. ஆயினும், நமது பத்திரிகை
யைப்படிப்போர் அவ்விதமான அனேக திருஷ்
டாந்தங்களைத் தமது அனுபவத்தேயும் கண்
டிருக்கலாம்.

"பெண்ணிற் பெருந்தக்கயாவுள கற்பென்னும்
திண்மையுண்டாகப்பெறின்."

என்றார் நாயனாரும். இங்கு கற்பென்பது
மனைவியர் கணவரிடத்து வைத்த மாறா
நேயமேயன்றி வேறன்று.

---

THE CITY OF SINGAPORE.

## சிங்கப்பூர் நகரம்.

சிங்கப்பூரென்னும் நகரைப்போல் பிரயாணி
களுக்குப் பார்க்க விநோதமான பட்டணம்
விசேஷமாயில்லை. இங்கு கீழ்த்திசையாரின்
நானுபேதங்களையும் அவரது வெவ்வேறான
நடையுடை பாவனைகளையும் சமயபேதங்களை
யும் ஒருங்கே காணலாகும். அதிபதிகளும்,
தளங்களும் முக்கியமான வர்த்தகர்களும் இங்
கிலீஷ்காரர். ஆயினும் ஜனங்களில் முக்கால்
வாசியும் சீனர்களாவர். இவர்களில் சிலர் செல்
வத்தாலோங்கிய வர்த்தகர்களாயும், சிலர் உண
ணூட்டு வேளாளர்களாயும் இருப்பார்கள்.
பெரும்பான்மையோர் தொழிலாளிகளும்
வேலைக்காரர்களுமாயிருப்பார்கள். சுதேசிக
ளாகிய மலேயர்கள் சாதாரணமாகச் செம்ப
டவர்களாகவும், படவுசெலுத்துவர்களாகவும்
இருப்பதன்றிப் போலீஸ் ஜவான்களிற்பெரும்
பான்மையும் இவர்களேயாம். மலாகாவி
னின்று வந்த போர்த்துகீசர் எழுத்துவேலை
களிலும், சில்லரை வர்த்தகங்களிலும் ஏற்பட்
டிருப்பார்கள். இந்தியாவின் மேற்றிசையி
னின்று வந்துள்ள க்ளிங்கென்னும் மகம்மதீயர்
களும், அரபிகளும், சில்லரை வியாபாரிகளா
யும், கடைக்காரராயுமிருப்பார்கள். குதிரைப்
பாகர்களும், வண்ணார்களும், வங்காளிகளாவர்.
இவர் தவிர தொகையிற் சிறியராயினும், மதிப்
பிலும் மரியாதையிலும் உயர்ந்துள்ள பார்ஸி
வர்த்தகர்களும் சிலர் இருக்கின்றார்கள். இவர்
களைத் தவிர இன்னும் மாலுமிகளாயும், வீட்
டுப் பணிவிடை செய்பவராயும், அநேக ஜாவா
னிகளும், ஸெலிபிஸ், பாலி, முதலான தீவாந்த

ரங்களில் நின்று வந்துள்ள அநேக வர்த்தகர்களும் இருக்கின்றார்கள். துறைமுகமோ, படைக்கப்பல்களாலும், ஐரோப்பியர்களது அநேக வர்த்தகக் கப்பல்களாலும், நூற்றுக்கணக்கான மலேய சீனக்கலங்களாலும், ஐந்நூறு அறுநூறு டன்பாரங்களை ஏற்க வல்ல பெருங்கப்பல்கள் முதலாக மீன் படவுகளும் ஏறியிறங்கும் பிரயாணிகளைக் கொண்டுசெல்லும் சிற்றுப்படவுகளும், இறுதியான எண்ணிறந்த மரக்கலங்களாலும் நெருங்கியிருக்கும். பட்டணத்துள்ளே அழகுமிகுந்த அநேக மாடமாளிகைகளும், இந்துக்களின் கோயில்களும், மகம்மதியரின் மசூதிகளும், கிரிஸ்தவாலயங்களும், சீனர்கோயில்களும், அழகிய ஐரோப்பிய பங்களாக்களும், வர்த்தக சாலைகளும், விநோதமான கடை கண்ணிகளும், சீனர், மலேயர் நெருங்கிவாழும் புறவூர்களும், உள்ளன.

இந்நகரில் வசிக்கும் பற்பல ஜனங்களுக்குள்ளும் முக்கியமானவர் சீனர்களேயாம். இவர்கள் மற்றவர்களிலும் தொகையிற்க பெருத்திருப்பதன்றியும் இடைவிடாமல் அங்குமிங்கும் பார்த்தவிடமெல்லாம் சஞ்சரித்துக் கொண்டிருப்பதனாலும் இந்நகர் சீனதேசத்தில் உள்ள ஓர் நகரமென்றே தோன்றும். சீன வர்த்தகன் சாதாரணமாய்த் தொந்தியும் தொப்பையுமாய் உருண்ட முகமும் காரியத்திலே கண்ணான பார்வையுமாயிருப்பான். இவன் உடுக்கும் உடை வெள்ளைச்சட்டையும் கறுப்புக் காலுறையுமாய் மாதிரியில் இழிந்த கூலிவேலை செய்பவன் உடைபோலவேயிருப்பினும் நாணயமான உயர்ந்த துணியிற் செய்யப்பட்டிருப்பதன்றி எப்போதும் சுவச்சதையாகவும் நேர்த்தியாகவு மிருக்கும். இவன் நீண்ட குடுமி சிவந்த பட்டுக்குஞ்சலம் வைத்துப் பின்னப்பட்டுக் குதிகாலி ஷிடிக்கத் தொங்கவிட்டிருக்கும். இவனுக்குப் பட்டணத்தில் அழகிய வர்த்தகசாலையொன்றைத் தவிர நாட்டுப் பக்கத்தில் சிறந்த வீடும் ஒன்றிருக்கும். நேர்த்தியான குதிரைவண்டி யொன்று வைத்துக் கொண்டு அவ்வண்டியிற் தினந்தோறும் சாயங்காலவேளையில் காற்று வாங்கச் சவாரிபோவான். இவனுக்குப் பணத்துக்குக் குறையில்லை. அநேக சில்லரைக்கடைகளும் வியாபாரப் படவுகளும் இருக்கும். தகுந்த ஆதாரவின்பேரில் முழுத்தவட்டிக்குக் கடன் கொடுப்பான். லாபத்துக்குமேல் லாபம் சம்பாதித்து வருஷத்துக்கு வருஷம் பணம் குவியக் குவியச்சதையும் தொந்தியும் கூடப்போடப் பூரிப்பான்.

சீனக்கடைத் தெருவில், அரிசி, துவரை, எண்ணெய், பிண்ணாக்கு, இரும்பு, ஈட்டி, செம்பு, பித்தளை முதலான அனேக சாமான்கள் விற்கப்படும். இக்கடைகளில் சாமான்கள் வெகுமலிவாயிருக்கும். ஓரணவுக்குத் தூரப்பணமும், அரை அணவுக்கு நாலுநூற்கண்டும், இன்னம் பேனாக்கத்திகள் கார்க்குத்திருகுகள், வெடிமருந்து, காயிதம்முதலிய அநேகசாமான்கள் சீமையிலும் அதிக மலிவாக அகப்படும். கடைக்காரன் வெகு நல்லமாதிரியாயிருப்பான். அவன் தன்னிடத்தில் உள்ள ஒவ்வொரு சரக்கையும் எடுத்துக்காட்டுவான். நீங்கள் ஒன்றும் வாங்காமற்போனாலும் வருத்தமில்லை. அவன் சொன்னவிலையிற் சிறிது குறைப்பினும் ஓட்டிக்கிரட்டிவிலைகூறும் க்ளிங் கரைப்போல் அவ்வளவு குறைக்கமாட்டான். நீ அவனிடத்தில் யாதேனும் சாமான் வாங்குவாயாயின் பின்பு உன்னைக் காணும்போதெல்லாம் நேசமாகப்பேசித்தன் கடையுட் புகுந்து உட்கார்ந்து போகும்படியோ அல்லது ஒரு கிண்ணம் தேநீர் சாப்பிடும்படியோ உபசரித்தழைப்பான். இவனுக்குப்போட்டியான இவ்வளவு பேருக்குள்ளே இந்தச்சில்லரை வியாபாரத்தில் இவனுக்கென்னலாபம் கிடைக்கக்கூடும். எவ்வாறு ஜீவனம் செய்வானென்று உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும். தையற்காரர்களும், செக்கிலியர்களும் அவரவர் வேலைகளைச் செவ்வையாகவும், நயமாகவும் செய்து கொடுப்பார்கள். அம்பட்டர்களுக்குத் தலை சிரைப்பதும் குரும்பை யெடுத்துக் காது

குடைவதுமாக ஒழியாமல் வேலை இருந்து கொண்டேயிருக்கும். காது குடைவதற்காகக் குரும்பைதோண்டி காதுசொறண்டி முதலிய பலவகைக் கருவிகள் வைத்துக்கொண்டிருப்பார்கள்.

பட்டணத்தின் வெளியோரங்களில் அநேக தச்சர்களும், கொல்லர்களும் வேலைசெய்து கொண்டிருப்பார்கள். தச்சர்கள் முக்கியமாகச் சவப்பெட்டிகளும், வர்ணமிழைத்து அலங்கரிக்கப்பட்ட உடுப்புப்பெட்டிகளும் செய்து கொண்டிருப்பார்கள். கொல்லர்களிற் பெரும்பான்மையோர் துப்பாக்கிசெய்வார்கள். இவர்களைத் துப்பாக்கிக் குழாய்களை, இருப்புக்கழிகளைக் கையாற் குடைந்து துளைத்துச் செய்வார்கள். இந்தக்கஷ்டமான வேலையில் இவர்கள் முயன்றிருப்பதை எப்போதும்காணலாம். ஆயினும் இவர்கள் நாளொன்றுக்கு ஒரு துப்பாக்கி வீதம் சிக்கிமுக்கிப் பூட்டுவைத்து அழகாக எப்படியோ செய்துமுடிக்கிறார்கள். தெருவுகளெல்லாம் இன்னதென்று சொரூபம் தெரியாதபடிக் கூவிக்கொண்டு நீர்க்குடமும், காய்கறிகளும், பழவர்க்கங்களும், பணியாரங்களும் விற்றுத்திரிவார்கள். சிலர் அடுப்புமுதலிய சமயற்கருவிகளொரு புறமும் மேசைப்பலகை மற்றொரு புறமுமாகக் காவடிகட்டி எடுத்துத் திரிந்து இரண்டு மூன்றணாவுக்கு சாதமும் கறியுமாக நேர்ந்த இடங்களில் சாப்பாடு போடுவார்கள். கூலிக்காரர்களும், படவுக்காரர்களும் ஆள்வேண்டுமா வேண்டுமா வென்று எவ்விடங்களிலும் அலமாலிடுவார்கள்.

---

THE SOLDIER'S REPRIEVE.

## மரண தண்டனையினின்று மன்னிக்கப்பட்டது.

---

"ஆ! என்னருமைக்குழந்தையை இனி எப்போது காண்பேன்? இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வாறுயிரிழக்கவா அவனை நான் தேசத்துக்குத் தத்தம் பண்ணினேன்? காவல்காக்கையில் ஏதோ க்ஷணப்போது கண்ணயர்ந்து விட்டானும் அதற்காக அவனுக்கு மரணதண்டனை விதித்து விட்டார்களாம்! இனி 24-மணிக்குள்ளே என் குழந்தை எங்கேயிருப்பானோ அறியேன்?" என்று ஒரு கிழவர் பிரலாபித்தனர். அருகிருந்த சிநேகிதரொருவர் அவரைத் தேற்றிக்கொண்டு "ஏன் விசனப்படுகிறீர் எல்லாம் கடவுள் செயல், 'அவனன்றி ஓரணுவும் அசையாது' அவர்திருவுளப்படியே வரும்' என்றனர்.

கிழவர் பின்னும் "ஐயோ என்னருமைக் கண்மணியே, என் தள்ளாதகாலத்துக்கு ஊன்றுகோல்போலுதவித் தடுமாற்றம் தீர்ப்பாயென் றிருந்தேனே, உனக்கிப்படிப்பட்ட கதியாவந்தது? நீ யொருநாளும் உன்கடமையைத்தவறி நடவாயே, உன்னறிவும், குணமும், ஆருக்குவரும்? 'தன் நாட்டுக்கு உழைக்காதவன் என்னமனிதன்? நாட்டின் நன்மைக்காகப் பிராணனையேனும் கொடுக்கத் துணியாதவன் மானமுள்ளவனா? நான் ஒருபோதும் பின்வாங்கமாட்டேன்,' என்று அடிக்கடிச் சொல்லுவான். அவன்தீரமென்ன காரியமென்ன" என்று பின்னும் பிரலாபித்தனர்.

சிநேகிதர் "ஏன் வீணா-விசனிக்கிறீர்? தைரியப்படுத்திக்கொள்ளும், உமக்கு அந்தப்பிள்ளை பிறக்கவேயில்லை யென்று வைத்துக்கொள்ளும்" என்றனர்.

கிழவர். "அவன் ஒருநாளும் அஜாக்கிரதையினால் தனக்கிட்ட கடமையைச் செய்யாதிரானே. குழந்தைக்கு என்ன உடம்போ ஏதோ, சுபாவத்திலே உடம்பு மெலிந்து பலனில்லாதவன், இராணுவத்தில்சேர்ந்து வேலை செய்ய அவனுக்குத் திறமையா? பச்சைப் பாலகன், இன்னம் 18-வயது ஆகவில்லையே. என் வயிற்றுக்கொடுமையினாலேயன்றோ நான் பாவி அவனைப்போகவிடுத்தேன்? என்வாயில் மண்விழுந்துவிட்டது" என்று பின்னும் அழுது வருந்தினர்.

இப்படி இவர்வருந்துகையில் அருகே ஒரு பெண்பிள்ளை அவற்றைச் செவிகொடுத்துக் கேட்டுக்கொண்டிருந்தனள். அவள் மனம்துயரத்தால் வருந்தினும் அதை வெளியிற் காட்டிக்கொள்ளாமல் தன் காரியத்திலேயே கண்ணுயிருப்பவள்போல வீட்டுவேலைகளை, வைக்க, எடுக்க, செய்துகொண்டிருந்தனள். அப்போது கதவை யாரோதட்டக் கிழவர் "அம்மா 'ப்ளாசம்' அங்கேயாவர் போய்ப் பார்," என்றார். அவள் சென்று ஒரு கடிதத்தை வாங்கிக்கொண்டுவந்து கிழவர் கையில் கொடுத்து "அப்பா, இது அண்ணு எழுதினது தான் என்றாள்."

கிழவருக்கு அதைத்திறந்து வாசிக்கக்கூட வசமில்லை, கை கிடுகிடு வென்று நடுங்கிற்று. அப்போது அந்நண்பர் அதை உடைத்துப் பின்வருமாறு படித்தனர்.

"பிரியமுள்ள பிதாவே—இக்கடிதம் உங்கள் கையில் சேருமுன்னமே நான் இவ்வுலகை விட்டு மறுவுலகுக்குப் போய்விடுவேன். முதலில் சாவென்றால் மிகவும் பயங்கரமாகத்தானிருந்தது. பின்பு அதை நினைக்க நினைக்க அப்பயம் நீங்கிவிட்டது. என்னைக்கையைக் கட்டிக் கண்ணைக்கட்டி ஒன்றும் சிறுமைப் படுத்தித் தொந்தரவு செய்யார்களாம். என் னிஷ்டப்படியே நின்று என் தண்டனையை அடையலாமாம். அது ஒரு நல்ல காரியந் தான். என் நாட்டுக்காகச் சண்டை முகத்தில் வெற்றியோடு சாகலாமென்றெண்ணியிருந்தேன், அந்தப்பாக்கியம் எனக்கில்லாமற் போயிற்று. ஏதோ கடமையிற்றவறினன் என்னும் அபக்யாதியோடு ஈனமான தண்டனைப்படும்படி என் தலையிலெழுதியிருந்தது. இதை நினைக்க நினைக்க எனக்குப் பெருந்துயருண்டாகின்றது. என் வல்லுயிர் பக்கென்று மாளாமலிருப்பது எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. 'ஆனால் உமக்கு அபமானம் உண்டாகும்படியான காரியத்தை நான் ஒன்றும் செய்யவில்லை.' நடந்த விவரங்களை யெல்லாம் சொல்லுகிறேன் அப்போதுமக்குச் சம்மதமாகும்.

"நான் என் சிநேகிதனை ஜம்மிகாரின் தாயாருக்கு அவனைப்பற்றி விசாரப்படவேண்டாம் நான்பார்த்துக்கொள்ளுகிறே னென்று உறுதி சொன்னது உமக்குத் தெரியுமே. அவனுக்கு உடம்புக்குவந்தபோது என்னாலானதெல்லாம் செய்தேன். உடம்பு சொஸ்தமாகி மறுபடியும் இராணுவத்தைச் சேரும்படி உத்தரவானபோது பாவம் அவனுக்கு இன்னம் தேகத்தில் நல்ல பலனுண்டாகவில்லை. அன்றி ராத்திரிக்கு முதல் நாள் நாங்கள் இன்னோரிடத்துக்குப் பாளையம் பெயரவேண்டியதாயிற்று. வழியில் அவன் மூட்டைமுடிச்சுக்களை யெல்லாம் என்னதோடே நானேகட்டிச் சுமந்து சென்றேன். அஸ்தமனமாகவே இருட்டுக்கு முன்போய்ச் சேரும்படி நாங்கள் அதிக விசையாகவும் நடக்கவேண்டியதாயிற்று. மூட்டையும் வரவரத் தூக்கமுடியவில்லை. எல்லாரும் கிரம்பக்களைத்துப் போனோம். ஜம்மியை அடிக்கடி நான் கைகொடுத்துக் கூட்டிக்கொண்டு போகாவிடின் அவன் வழியிலேயே மறித்துபோயிருப்பான்.

"நாங்கள் கடைசியில் பாளையம் வந்து சேர்ந்ததும் நான் முற்றிலும் களைத்துப்போய் விட்டேன். அன்று காவல்காக்கவேண்டியது ஜம்மியின் முறை, அவன் பாவம் நிரம்பக்களைத்துப்போயிருந்ததனால் அவனுக்குப்பதிலாக அவன்வேலையை நான்பார்ப்பதாக ஒப்புக்கொண்டேன். ஆனாலென் களைசொல்லி முடியாது. என்தலைக்கு நேரே துப்பாக்கியை நாட்டித் தூங்காதே, சுட்டுப்போடுவேனென்று பயமுறுத்தினாற்கூட என்னால் விழிக்கமுடியாது. அப்போது நான் அதை ஆலோசிக்கவில்லை; அப்புறம் தெரிந்தது, என்னசெய்வேன்."

இதைக்கேட்டதும் கிழவர் பத்தியோடும் "நல்லவேளை நான் நினைத்தபடியே யாயிற்று. என்குழந்தை அஜாக்கிரதையினாலே தூங்கி

யிருக்கமாட்டானென்பது எனக்கு நம்பிக்கை தான், மேலேவாசியும்" என்றனர்.

"தங்களுக்கு இந்தக்கடிதம் எழுதும்படிக் கொஞ்சம் சாவகாசம் கொடுத்திருப்பதாக எங்கள் சேனாதிபதி சொன்னார். அவரைப் பற்றித் தாங்கள் ஒன்றும் தீங்குநினைக்கப்ப டாது. அவர் அவரது கடமையையே நிறை வேற்றுகிறார். அவரால் முடியுமானால் அவ ரென்னைக் காப்பாற்றாமல் போகமாட்டார். ஜம்மியைப்பற்றியும் ஒன்றும் கெடுதி நினையா தீர்கள். பாவம் அவன்படும் விசனம் சொல்லி முடியாது. எனக்குப் பதில் தன்னைத் தண் டிக்கும்படி எவ்வளவோ மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறான்.

"அம்மானையும் ப்ளாசத்தையும் நினைக்கும் போது எனக்கு ஆறாத்துயரம் உண்டாகின் றது. நீங்கள்தானவர்களுக்குத் தைரியம் சொல்லித்தேற்றவேண்டும். நான் சஞ்சல மில்லாமல் தைரியமாய்ச் சீவனைவிடுகிறே னென்று சொல்லவும். யுத்தம் முடிந்ததானால் என்னைப்பற்றி இப்போதுண்டான அவமான மெல்லாம் நீங்கிப்போம்.

"கடவுள் உதவியாயிருந்து என்னைக்காக்க வேண்டும். பொறுக்கிறது மிகவும் கஷ்டம் தான், என்னசெய்வது. விடைபெற்றுக்கொள் ளுகிறேன். இனிமேல் உங்களை நான் எப் போது பார்க்கப்போகிறேன். ஒருநாளுமில்லை. நான் ஏதாவது குற்றம் குறைசெய்திருந்தபோ திலும் பொறுத்து மன்னிக்கவேண்டும்." என் றுமுடித்தனர்.

அன்றிராத்திரி யாவரும் படுமுடங்கினபின் கொல்லைக்கதவை திறந்துகொண்டு ஒருபெண் வெளியே புறப்பட்டு ஒற்றையடிப்பாதை வழி யாக ராஜமார்க்கத்தை நோக்கிச்சென்றனள். அவள் செல்வதைப்பார்த்தால் நடப்பது போலத் தோன்றவில்லை. பறப்பது போலிருந் தது. அந்தப்பக்கம் இந்தப்பக்கம் திரும்பிப் பாராமல் அப்போதைக்கப்பொது கையைக் கட்டிக்கொண்டு சுவாமியை வேண்டிக்கொள் ளும்பாவனையாக ஆகாயத்தை மாத்திரம் அண் ணாந்து நோக்கிச்சென்றனள். அப்பெண் இரண்டு மணிக்கெல்லாம் ரயில் ஸ்டேஷனுக்கு வந்து இராவண்டிவருவதை எதிர்நோக்கிநின் றனள். ரயில் நடத்துவோன் வண்டியைத் திறந்து அவளை உள்ளே தூக்கிவிடுகையில் தன் கை லாந்தல் வெளிச்சம் தாக்க அவளது கண் ணீர்வடிந்த முகத்தைப் பார்த்து யாதோ வென்று ஆச்சரியப்பட்டான். அவனிரண் டொரு கேள்வை கேட்டதற்கு அப்பெண் பளிச்சென்று மறுமொழி சொல்லச் சங்கதி எல்லாம் தெரிந்துகொண்டான். பின்பு தகப் பன்கூடப் பெற்ற பெண்ணிடத்தில் இருக்க மாட்டான் அவ்வளவு விசுவாசமாய் அவளைக் கூட்டிக்கொண்டு போனான்.

அவள் எங்கேபோகிறாள்? தன் தமயன் உயிரை அளிக்கும்படி ராஜ்யாதிபதியாகிய லின் கன் என்பவரைக்கேட்டுக் கொள்ளும்பொருட் டு வாஷிங்டனகருக்குப் போகின்றாள். அவள் புறப்பட்டுப்போவது வீட்டாரொருவருக்கும் தெரியாது. வரும்போது தன் பிதாவுக்கு தான் இன்ன இடத்துக்கு இன்னகாரியமாகப் போகிறேனென்று ஒரு சீட்டு மாத்திரம் எழுதி வைத்துவிட்டு வந்தனள். தமயன் கடிதத் தையும் கூடக்கொண்டு போகிறாள். தயாள குணமுடைய லின்கன் அதிபதியின் மனம் அக்கடிதத்தைக்கண்டு இரங்காமற்போகாது. மறுநாட்காலையில் அவர்கள் நியூயார்க் பட்ட ணம்வந்து சேர்ந்தார்கள். ரயில் நடத்துவோன் உடனே அவளை வாஷிங்டனுக்குப்போகும் வண்டியில் ஏற்றிவிட்டான். ஒருகணம்தப்பி னால் தன் தமயனைக் காப்பாற்ற முடியாமற் போனாலும் போகும். ஆதலின் அதிசீக்கிரமாக அவள் தலை நகராகிய வாஷிங்டனுக்கு வந்து 'வைட்ஹௌஸ்' என்னும் ராஜமாளி கைக்கு உடனே சென்றனள். அதிபதி அப் போதுதான் முக்கியமான துரைத்தனக்கடி தங்களைப் பார்வையிட்டுக் கையொப்பம் செய் யும் தமது காலைவேலைக்கு உட்கார்ந்தார்.

உடனே ஒருவரைக்கொண்டும் தெரிவிக்காமலே கதவை மெல்லத் திறந்துகொண்டு ப்ளாசம் கட்டினகையும் கவிழ்ந்த முகமுமாய் அவர் முன்சென்று நின்றனள்.

அப்போது அதிபதி அவளைப்பார்த்துத் தமது இனிய குரலால், அம்மா உனக்குயாது வேண்டும். இவ்வளவு அதிகாலையில் இங்கு வந்தாய்' என்றனர்.

பென்னியின் பிராணனைத் தயவுசெய்து அளிக்கவேண்டுமையா என்று தட்டித்தடுமாறிச்சொல்லினள்.

"பென்னியா? அவன் யாவன் பென்னி?" "என் தமயன் ஐயா. அவன் தன் காவலில் நித்திரைபோனதினால் அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது".

ஆகா! அப்படியாசெய்தி தெரிந்தது. அவன் செய்தது பெருந்தப்பிதமே அம்மா. எவ்வளவோ அபாயமான வேளையில் அவன்தன் கடமையை நிறைவேற்றாமல் தூங்கிப்போய் விட்டான். அவன் அஜாக்கிரதையால் அனேக ஆயிரம் ஜனங்களுக்குச்சேதம் நேர்ந்திருக்கலாம்" என்றனர்.

"ஆமாம் அப்படித்தான் எங்கள் அப்பாவும் சொன்னார், பாவம் பென்னி மிகவும் களைத்துப் போயிருந்தான், ஜம்மிக்கு பலமேயில்லை. அவன் இருவர் வேலையை ஒருவன் செய்ய வேண்டியதாயிற்று. அன்றியும் அன்று ஜம்மியின்முறை, என்தமயன் முறையன்று, ஜம்மி தாங்கமுடியாமல் களைத்துப்போயிருந்தான். பென்னியும் களைத்துத்தான் போயிருந்தான். ஆனால் அதைப்பற்றி அவன் ஆலோசிக்கவில்லை" என்றனள்.

'நீ என்னசொல்லுகிறாயம்மா? கிட்டவந்து சொல்லு, எனக்கு நன்றாய் விளங்கவில்லை' என்று அத்தயாளகுணமுடைய பிரபு தமக்குரிய சுபாவப்படி இக்குற்றத்தை மன்னிப்பதற்கு யாதேனும் ஆஸ்பதம் உண்டாவென்று கருதி அவள் வார்த்தையைச் செவிக்கொடுத்துக்கேட்டனர்.

ப்ளாசம் சமீபத்தில் செல்ல, அவர் அவள் தோள்மேல் தமதுகையை அன்பாய்வைத்து அவளுடைய விசாரத்தினால் வாடிமெலிந்த முகத்தை தமக்கு நேராகத்திருப்பி அவளைச் சொல்லச்சொல்லிக் கேட்டனர். அவளும் தன் கள்ளம் கபடமில்லாத விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாகச் சொல்லித் தன் தமயன் கடிதத்தையும் அவர்கையில் கொடுத்தனள். அவர் அதைக் கவனமாகப்படித்துப்பின்தமது பேனாவை எடுத்து அவசரமாக இரண்டு மூன்று வரியெழுதி மணியையடித்தனர். இந்தக்கடிதத்தை "தக்ஷணமே அனுப்புக" என்றவரிட்ட உத்தரவு ப்ளாசம் காதில்பட்டது. அதிபதி பின்பு அப்பெண்ணை நோக்கி, "அம்மா நீ வீட்டுக்குப்போய், தனது ஏகபுத்திரனுக்குப் பிராணஹானிவந்தபோதிலும் தன் துரைத்தனத்தார் விதித்த தண்டனை அநீதமென்றெண்ணாத மேன்மைக்குணமுடைய உன் தந்தையோடு அச்சற்புத்திரன் பிராணனை இழக்க மனம்பொருந்தாதபடி அவ்வளவு அருமையாக நான் மதிக்கின்றேனென்று சொல்லு போ. அம்மா இல்லாவிடின் இங்கேயிரு நாளை உன் தமயனுடன்கூடிச் சேர்ந்துபோகலாம். அவன் இவ்வளவுதள்ராமல் மரணத்தை எதிரிட்டதினால் அவனுக்குச் சிறிது ஆசுவாசம் வேண்டும். ஆதலின் அவனையும் உன்னுடன் அனுப்புவிக்கிறேன்" என்றனர்.

அப்போது ப்ளாசம் "ஐயா தங்களுக்குக் கடவுள் நன்மையெல்லாம் கொடுத்தருள்வாராக" என்றனள். அவள் வேண்டுகோளைக் கடவுள்கேட்டுப் பதிந்துகொண்டனர் என் பதில் யாவர் சந்தேகிப்பார்கள்.

இதற்கு இரண்டு தினத்துக்குப்பின் அவ்விளைஞனாகிய படைச்சேவகன் தன் தங்கையோடு அதிபதியின் அரண்மனைக்குவந்து அவரைத் தனிமையில் தரிசிக்கப்பெற்றனன். அப்போதவர் அவனை ஆதரவாக ஏற்று "உடம்பு சொஸ்தமில்லாதிருந்த தன் சிநேகிதன் சுமைகளைத் தான் சுமந்து சென்று அதற்காக இறக்

கவந்தபோது யாதும் அதிருப்தியடையாமல் இருக்கக்கூடிய போர்ச்சேவகன் அவன் தேசத்தாரால் நன்குமதிக்கப்படுதற்கருகன்" என்று அவனைச் சிலாகித்துக்கொண்டனர்.

பின்பு பென்னியும் ப்ளாசமும் தமது ஊருக்குத்திரும்பினார்கள். ரயில் ஸ்டேஷனில் அவர் வரவை எதிர்நோக்கி வெகுபேர்கள் பந்துமித்திரர்கள் கூடியிருந்தார்கள். கிழவர் தமது பிள்ளை கையைப்பற்றி மார்போடணைத்துக்கொண்டு தாரைதாரையாய்க் கண்ணீர்விட்டு சுவாமி உன் திருவருள் கொண்டாடக்கடவது" என்று பத்தியோடும் துதித்தனர்.

இச்சரித்திரத்தில் கூறிய அப்ராஹாம் லின்கன் என்பவர் அமெரிகா தேசத்தில் ஓர் எளிய வேளாளனுக்குப் புத்திரராகப் பிறந்தும் தமது ஆச்சரியகரமான நன்முயற்சியாலும் மேன்மைக்குணங்களாலும் ஐக்கியமாகாணங்களுக்கு அதிபதியாகும் ஒப்பற்ற பதவியைப் பெற்றனர். அவர் இரண்டாம் விசை அதிபதியாகத்தெரிந்து நியமிக்கப்பட்ட இரண்டு மூன்றுவாரத்துக்கெல்லாம் 'பூத்' என்னும் நாடகக்காரனாகிய ஓர் கொடியோனால் இப்போது மாக்கின்லி அதிபர் இறந்தது போலவே துப்பாக்கியால் சுடப்பட்டு இறந்தனர். ஆ! ஆ! நல்லவர்களுக்குப் பொல்லாதவர்களால் கேடுண்டாகும் இக்கலியன் கொடுமைதானென்ன! எல்லாம் ஈச்வரசங்கற்பம்.

---

## Womens' Memorial to Queen Victoria in the Madras Presidency.

## சென்னை ராஜதானியில் விக்டோரியா மஹாராணி அவர்களின் ஞாபகார்த்தமாகப் பெண்பாலார் செய்துள்ள பிரயத்தினம்.

---

இவ்விஷயத்தைப்பற்றி நமது பத்திரிகையைப்படிப்பவர்கள் அறியவிரும்புவார்களாதலின், "இந்தியன் லேடீஸ் மகஸீன்" என்னும் சுதேசப்பெண்டிரது உபயோகார்த்தமாகப் பிரசுரிக்கப்பட்டு வரும் பத்திரிகையிலிருந்து பின்வரும் விஷயங்களை இங்கு எடுத்துக்காட்டுகின்றோம்.

காருணியப்பெருங்கடலாய் நம்மிடத்து மாறாத நேயத்தோடு வெகுநாள் நம்மைத் தாய்போற்புரந்தருளிய விக்டோரியா சக்கரவர்த்தினியார் மரணமடைந்தபின் அவரது நினைவை அழியாது நமக்கும் நம் சந்ததியாருக்கும் நிலைக்கச்செய்யும்பொருட்டு அங்கங்கே ஆண்பாலாரும் பெண்பாலாரும் முயன்றுவருதலை அநேகர் அறிந்திருக்கலாம்.

இவ்விஷயமாக நமது சென்னை இராஜதானியாகிய தென்னிலத்தில் என்ன செய்திருக்கின்றார்கள் என்பது பலரும் அறிய விரும்பத்தக்கதே. பெண்கள் பரமாக முதல் முதல் இவ்விஷயத்தில் மிகுமுயற்சியெடுத்துக்கொண்டவர் நமது பெருமைதங்கிய கவர்னராகிய ஆம்த்ஹில் பிரபு அவர்களின் மனைவியாராகிய ஆம்த்ஹில் பெருமாட்டியே. இவர் இவ்விஷயமாக எழுதியனுப்பிய நிரூபத்தில், அரசியின் ஞாபகார்த்தமாகப் பலவிதமான ஏற்பாடுகள் செய்யப்படினும், இந்த இராஜதானியிலுள்ள ஆண்பாலாரை ஒழித்துப் பெண்பாலார்மாத்திரமே ஒருங்கு சேர்ந்து தமக்கே உரியதாக ஓர் சிறந்த ஏற்பாடு செய்தல் அவசியமென்றும், அவ்வேற்பாட்டை சுதேசப்பெண்களுக்கு வைத்திய விஷயமாகச் செய்துவரும் உதவிக்குச் சாதகமாகப் பயன்படுத்தல்வேண்டுமென்றும் சொல்லுகின்றனர். மஹாராணியவர்களுக்கு சுதேசப்பெண்டிரது வைத்திய விஷயத்தைப் பார்க்கிலும் கவலையும் மகிழ்வும்தருவது வேறொன்றுமில்லையென்றும் ஆனதனால் நம்முயற்சியினால் சேரும் பொருளை 'டப்பிரின் பண்டின்' மதிராஸ் அங்கத்தின் விசாரணைகர்த்தர்களிடத்தில் அவரால் நடத்தப்பட்டு வரும் விக்டோரியா சுதேச மேன்மகளிர வைத்தியசாலையி (Victoria Caste and Gosha Hos-

pital)ன் செலவுகளுக்கு உபயோகிக்கப்படுத்தும்படிக்கும் அச்செலவுகள்போக மீந்ததை வைத்திய விஷயமான சாஸ்திரங்களிற் பயின்று தேறிவரும்படிப் பெண்களைச் சித்தப்படுத்துவதில் உபயோகிக்கவும் ஒப்பித்தல்வேண்டுமென்றும் கூறியிருக்கின்றனர்.

மேன்மை தங்கிய இப்பெருமாட்டியார் தமது பிரேரணையாலே இவ்விஷயமாக ஒவ்வொரு ஜில்லாவிலும் தனித்தனியே கம்மிட்டிகள்கூட்டிச் சந்தாச் சேர்க்கும்படி ஏற்படுத்தியதன்றியும் தாமேயும் நேரே அனேக ராணிகள் மகாராணிகள் முதலான மேற்குலப்பெண்டிர்க்கு எழுதி அவரது சகாயத்தை ஆகுந்துணையும் செய்யும்படிக் கோரினர். இக்கோரிக்கைப்படி அநேகர் பொருளுதவியோடு, பெருமாட்டி இவ்வாறு பெண்களுக்குப் பயன் தரக்கூடியவிஷயத்தில் இராணியவர்களின் அபீஷ்டத்தை அநுசரித்துச் செய்ய மேற்கொண்ட நன்முயற்சிக்காக அவர்க்குத் தங்கள் தங்கள் வந்தனங்களையும் சமர்ப்பித்து வெகு உபசாரமாக எழுதியிருக்கின்றனர். அவர்களிற் சிலரது பேரும் உதவிய பொருளும் வருமாறு:—

| | | ரூபாய். |
|---|---|---|
| 1. | மைசூர் மகாராணியார் | ... 1,000 |
| 2. | ராணி சிட்டி ஜனகய்ப கஜபதி ராவும் குடும்பத்தாரும் | ... 2,278 |
| 3. | பர்லாக்கிமிடி ராஜாவின் மனைவியும், புத்திரியும் ... | ... 4,000 |
| 4. | ஜயபுரம் மகாராணி ... | ... 2,400 |
| 5. | மந்தசராஜா தன் மனைவிக்காக.. | 2,000 |
| 6. | பொப்பிலிமகாராணியார் | ... 2,000 |

இவ்வாறு இராணிகளும், மகாராணிகளும் தனித்தனியே பெருந்தொகைகள் உதவி செய்ததன்றியும் அங்கங்கே பற்பல விடங்களில் இவ்விஷயமாகப் பற்பல கம்மிட்டிகள் கூடி விஷயத்தைப் பிரஸ்தாபித்து ப்ரகடனம் செய்து மிகுந்த பொருளும்சேர்த்திருக்கிறார்கள்.

கனம் பொருந்திய பாஷ்யமய்யங்கார் மனைவியார் தமது கிரகத்தில் ஒரு சபை சேர்த்துப் பிரஸ்தாபித்தனர். செஞ்சம் ஜில்லாவில் ஆஸ்காநகரத்தில் ஒரு சபை கூடி ஒரு பெண்மணி அங்கிலேய அரசாக்ஷியில் நாம் அடைந்துள்ள நன்மைகளையும் மஹாராணியவர்கள் நம்மிடத்து வைத்திருந்த வபிமானத்தையும் பற்றித் தெலுங்கில் விவரித்தனர், இன்னொருவர் மஹாராணியவர்கள் ஜீவசரித்திரத்தையும் குணதிசயங்களையும் தெரிவித்தனர். இன்னொருவர் தமது மாமனரால் அச்சபையில் படித்துக்காட்டுதற் குரியதாக எழுதப்பட்ட சில பாடல்களைப்பாடி வாசித்தனர்.

இவ்வாறு சேர்த்துவரும் தொகையில் சிறிது பாகம் அங்கங்கே பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் ஏற்பட்டுள்ள வைத்திய சாலைகளின் உபயோகத்துக்காக நிறுத்திக்கொள்ளப்பட்டு ஒரு பாகம்மாத்திரமே ஆம்த்ஹில் பெருமாட்டிக்கு அனுப்பப்பட்டது முக்கியமாய் இவ்வாறு நிறுத்திக்கொள்ளப்பட்டது பல்லாரியிலும் கள்ளிக்கோட்டையிலும். பல்லாரியில் மொத்தத்தில் ரூபாய் 20,000-ம் கள்ளிக்கோட்டையில் ரூபாய் 5,000-ம் சேர்ந்தன. இதுவரையில் சேர்ந்த தொகையின் மொத்தம் ரூபாய் 45,000 இது தவிர அங்கங்கே தனித்தனிச் செலவுசெய்ய நிறுத்திக்கொண்டது ரூபாய் 17,000.

ஆம்த்ஹில் பெருமாட்டியார் உத்தேசித்த காரியம் எண்ணியவாறே நிறைவேறியது. இப்பெருமாட்டியின் பெயர், மஹாராணியவர்களின் ஞாபகார்த்தமாகப் பெண்பாலரால் தென்னிந்தியாவில் ஏற்படுத்தப்படுத்திய ஏற்பாட்டில் எப்போதும் பொருந்தி நினைக்கப்படும் என்பது துணிபு.

## The Planetory and Terrestrial Worlds Comparatively Considered.

## பூமண்டலத்தையும் கிரகங்களையும் அகிலப்ரபஞ்சத்தோடொப்பிட்டு நோக்கி ஆராய்வது.

---

பூமியின்மீது வசிப்பவர்களாகிய நமக்கு இப் பூகோளத்தைவிடப் பெரிதாகத் தோற்றுவ தொன்றுமில்லை. இது மற்ற அண்டங்கள் யாவினும் பெரிதாகத் தோற்றுவதுமன்றி, புல் பூண்டு செடி கொடி மரங்களால் எங்கும் ஆடைபோல மூடப்பட்டுக் கண்ணுக்கு மிக்க அலங்காரமாயுமுள்ளது. ஆயினும் வானிலுள்ள யாதேனுமோர் கிரகத்தினின்று பார்ப்பவர்களுக்கு இஃது எங்கும் ஒரேதன்மையாக வேறுபாடின்றி ஒளிமயமாகத் தோற்றுவதன்றி அளவிலும் ஒரு பொட்டளவாகவே தோன்றும். இன்னம் அதிக தூரத்தில் வசிப்பவர்களுக்கு இது முற்றிலும் கண்ணுக்குத் தெரியாமலே மறைந்துபோகும். ஒரு காலத்துக் காலையில் சூரியோதயத்துக்கு முன் கிழ்த்திசையில் உதிப்பதாயும் இன்னொருகாலத்தில் மாலைப்போதில் நக்ஷத்திரங்களுக்கெல்லாம் முன்னே மேற்றிசையிற் றோன்றுவதாயுமுள்ள சுக்கிரனென்பதும் நக்ஷத்திரமென்று சொல்லப்படினும் இப்பூமிபோலவே ஓர் கிரகமேயாகும். இச்சுக்கிரனும் சூரியனைச்சுற்றி அவ்வளவு ஆச்சரியமாக ஓடித்திரிகின்ற மற்றக் கிரகங்களும், இயற்கையில் ஒளியில்லாதனவாய் சூரியனுடைய ஒளியை ஏற்றுப் பிரகாசிப்பவைகளாம். அவற்றில் ஒவ்வொன்றினும் தரைகளும் கடல்களும் ஆகாயமும் அவ்வவற்றிற்குரியவாகவுள்ளன. அவற்றில் ஜீவராசிகள் வாழ்தற்கேற்ற ஆகாராதிகள் அமைக்கப்பட்டிருப்பதன்றி அவை நம்மையொத்த சேதனப் பொருள்களாலும் வசிக்கப்பெற்றுளவென்றெண்ணுகிறார்கள். இவை யனைத்தும் நாம் வாழ்கின்ற இந்தப் பூமண்டலமுள்படப் பரம காருணிய மூர்த்தியாகிய சர்வேசுவரனுடைய அருட்கொடைகள் யாவையும் தன் வழியே நமக்குத் தருவதாகிய சூரியனைச்சார்ந்து அச் சூரியகிரணங்களால் தாம் தமது ஒளியைப் பெற்று உயிர்களுக்கு இனியவாசஸ்தானமாக விளங்குகின்றன.

சூரியன் நம் கண்ணுக்கு நாடோறும் ஆகாயத்திற் சுற்றிவருதல்போலத் தோற்றினும், உண்மையில் அசைவறநிலையாக நிற்பதேயாம். அது அசையாமல் அச்சுக்கட்டைபோல நடுவில் நிற்க, நாம் வாழும் இப்பூகோளமும் இன்னம் இதிலும் பெரியவைகளான மற்றக் கோளங்களும் அதைச்சுற்றி ஓடித்திரிகின்றன. சூரியன் பார்வைக்கு ஓர் கடியாரத்தின் முகம்போல அவ்வளவு சிறிதாகத் தோற்றினும் உண்மையில் அநேக உயர்ந்த பர்வதங்களையும் அகாதமாயகன்ற கடல்களையும் தன்னிடத்துப்பெற்ற இந்தப் பூமண்டலத்திலும் பல்லாயிரம் பங்கு பெரிது. அதனூடே அதன் மையத்தின் வழியே ஒருபுறத்து நின்று மறுபுறத்துக்குச்செல்லும் ஓர் இரேகையினளவு எட்டு லக்ஷம் மைலுக்குமேலே இருக்கும். அதைச்சுற்றியோடும்படி ஓர் பந்தனம் அமைக்கப்படுமோயின் அது அநேக கோடிக் கணக்கான நீளமுடைத்தாகும். அதன் கனபரிமாணத்தை அளந்து நிர்ணயிப்பின் அத்தொகை நம்மறிவுக் கெட்டாததாவதன்றியும் வாக்கினாலும் உரைக்க முடியாது. இவ்வாறு பண்டிதர்கள் சொல்லும் விருத்தாந்தங்களைக் கேட்க நமக்குப் பெருவியப்புண்டாகாமற் போகுமா? இவற்றைக் கேட்கும்போது இவ்வளவு அவாங்மனோகோசரமாகி விரிந்துள்ள பெருநெருப்பை மூட்டி அவ்வக்னிச் சுவாலையை அநேக ஆயிரம் நூற்றாண்டுகளாக அணைந்துபோகாமல் எரிந்துகொண்டிருக்கும்படி அமைத்திருக்கும் அந்த ஆதிகாரண மூர்த்தியின் சக்தி எவ்வளவானதோ என்று ஆச்சரியம் உண்டாகாமற்போமா? இன்னம் இவ்விஷயமாகச் சாஸ்திரங்கள் என்ன சொல்லுகின்றனவென்று சற்றே கவனிப்போமாக.

சூரியனும் அதைச்சுற்றியோடும் கிரகங்களுமாகக்கூடி அகில புவனமாகிய இம்மகா கம்

பிரமான யந்திரத்தில் ஆராயின் மிகவும் சிறியதோர்பாகமே யன்றி வேறில்லை. ஒவ்வொரு நக்ஷத்திரமும் பார்வைக்கு ஒரு மேன்மகளின் கைவிரல் மோதிரத்தில் துலங்கும் வயிரக் கல்லைவிட உருவிற் பெரிதாகத் தோன்றுவிடினும் அம்மா! உண்மையில் சூரியனைப் போலவே உருவிலும் ஒளியிலும் சிறந்த ஓர் பெரிய அண்டமாகும். அவ்வொளிப் பிழம்பாகிய கதிரவனைப்பார்க்கிலும் அது உருவிலேனும் ஒளியிலேனும் எவ்வளவாயினும் குறைந்ததன்று. ஆதலின், ஒவ்வொரு நக்ஷத்திரமும் ஒவ்வொரு அண்டமட்டுமே யன்று; அநேக அண்டங்கள் தன்னைச்சூழ்ந்து செல்லத்தான் மத்தியில் அவற்றிற் காதாரமாய் நிற்கும் அண்டமண்டலமாகும். ஆயினும், அளவுக்கடங்காத நெடுந்தூரத்தில் நிற்றலால் அவை யொன்றும் நம் கண்ணுக்குப் புலப்படுவதேயல்லை. நக்ஷத்திரங்கள் இவ்வளவு சிறியவைகளாய் கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாத புள்ளிகள்போலத் தோற்றுதற்குக் காரணம் அவற்றின் எண்ணுதற்கரிய அளவைக் கடந்த நெடுந்தூரமே யன்றி வேறல்ல. வெடிமருந் திட்டுக்கெடித்த பெருவெடிப் பீரங்கியினின்றும் வெளிப்படும் ஓர் குண்டு தன் வேகத்தில் எவ்வளவும் குறையாமல் ஒரே நிலையாகச் செல்லுமாயின் நமக்கு மிகச்சமீபமான நக்ஷத்திரத்தைப்போ யெட்டுதற்கு எழு லக்ஷம் வருஷம் வேண்டிவரும் ஆதலின் அந்நக்ஷத்திரங்களின் தூரம் எவ்வளவு அவாங்மனோகோசரமானதோ நீங்களே அறிந்துகொள்ளலாம். இத்தனை விரிவாகிய இப்பிரபஞ்சத்தின் தன்மையை ஆலோசிக்கும்போது எனது எண்ணுதற்கரிய சிறுமை வெளிப்படுதலன்றி இப்பூவுலகிலுள்ள மற்றப் பொருள்களின் அற்பமும் சிறுமையும்கூட விளங்கும். ஆகாயத்திலுள்ள அற்புதமாகிய பொருள்களோடு ஒப்பிட்டு நோக்குங்கால் இப்பூமியும் அதில் உள்ள உன்னதமான பொருள்களும் எவ்வளவு? இப்பிரபஞ்ச கோடிகளையுள்ளடக்கிய பிரமாண்டத்தை விளக்கிக்காட்டும் ஓர் படத்தில் கண்ணுக்குத தோன்றியும் தோன்றாமலு மிருக்கும் ஒரு புள்ளி யென்றன்றோ அதைச் சொல்லவேண்டும். பொருள்களை நிதானித்தறியவல்ல ஓர் பண்டிதர் சொல்லுகிறபடி இவ்வுலகங்களுக்கெல்லாம் ஒளிதந்துவிளக்கும் சூரியனை முற்றிலும் அணைத்தவித்து அதைச்சுற்றியோடுகின்ற கிரக சமூகத்தையும் நிச்சேதமாக நாசம் செய்யினும் கடற்கரையில் உள்ள மணலில் ஒரு மணி மணலை எடுத்து ஒளிப்பின் எவ்வாறு அது நீங்கிய தன்மை ஒருவர்க்கும் புலப்படாதோ அதுபோலவே இவ்வுலகங்கள் முழுதும் ஒருங்கே பார்க்கவல்ல ஒருவர் கண்ணுக்கு அவைபோன தன்மையே புலப்படமாட்டாது. அவற்றின் உருவமும் அவை அடைத்துக்கொண்டிருப்பதான ஸ்தல பரிமாணமும் அகில ப்ரபஞ்சத்தோடொப்பிட்டு நோக்குகையில் எவ்வளவோ மகா சொற்பமாதலின் அவை அழிந்துபோனதினால் அகிலகாரணராகிய கடவுளின் அளவற்ற சிருஷ்டிப் பொருள்களில் ஒன்று குறைந்துபோயிற்றென்னும் தன்மையே தோன்றமாட்டாது. இவ்வாறு நாம் வாழு மிப்பூமண்டலமொன்றே யன்று, இந்த சூரியமண்டல முழுதுமே இவ்வளவு சிறிதாயின் ஒரு ராஜ்யத்தையாவது தேசத்தையாவது எவ்வளவென்று சொல்லுவது. சிற்சில சிறிய பிரபுக்களின் ஆட்சியையாவது, செல்வவந்தரென்று வெகுவாகக் கொண்டாடப்பட்டவர்களின் ஸ்திதியையாவது என்னென்று சொல்லுவது? அவற்றை என்னுடைய அற்ப சொத்தோடு சாதிர்சிபப்படுத்தின் அவை எவ்வளவோ அளவிற் பெரியவையென்றே, சொல்லவேண்டும். அப்படிக்கன்றி இந்த அகில பிரபஞ்சத்தோடுவைத்து அளந்தால் அவை எத்துணைச் சிறியவை! எவ்வளவு அற்பமானவை! அவை எவ்வளவு பகட்டுப் பகட்டினும் சுத்த சூன்யத்துக் கொப்பாகவே சுருங்கிவிடும். ஆக்ஷேபணையில்லை.

FROM ADDISION.

## SELECTIONS.

### I. ON THE SUPERIORITY OF RICHES.

### செல்வத்தினுயர்ச்சி.

---

1. குணமிருந்தாலும் குலமிருந்தாலும் கொழுந் தமிழின்
மணமிருந்தாலும் மதியிருந்தாலும் வழுத்திடு*வங்
கணமிருந்தாலு மொர்காசும் பெறாது சிங்கார அரைப்
பணமிருந்தாலவர்க் கெல்லாருமஞ்சலிபண்ணுவரே.

2. சத்துவம் புத்திவித்தை சதுர்விதார்த்தங்களான
இத்தனை விதமுஞ் செல்வமில்லையேல் இல்லையாகும்
சத்துவம் புத்திவித்தை சதுர்விதார்த்தங்களான
இத்தனை விதமும் செல்வம் எய்திடில் எய்து மன்றே.

3. கதிரவன் இலையேற் கண்ணிற் காண்பன மறையுமாபோல்
நிதிய மொன்றிலை யேல்யார்க்கும் நீதிமாஞானபோதம்
துதிபெறுகீர்த்தி ஆண்மை சூழ்ச்சி மந்திரம் விசாரம்
சதிரபிமானமெல்லாம் தன்னிலே மறைந்து போமால்.

4. சொற்ற ருகலை யெலாம் தொடர்ந்து பற்பகல்
கற்றவராயினும் கழி நிரப்பினால்
அற்றவர் ஆவரேல் ஆக்கம் வேண்டியே
பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால்.

5. நாலுறுகல்வியை நுனித்து நாடியே
வாலறிவெய்திய வரத்தினோர்களும்
மேலுறு திருவொடுமேவுறார் எனில்
ஞாலமங்கவர்தமை நவையுள் வைக்குமால்.

6. கல்லானே ஆனாலும் கைப்பொருளொன்றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர் கொள்வர் இல்லானை
இல்லாளும் வேண்டாள் மற்றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லாதவன்வாயிற்சொல்.

7. இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு.

8. பொருளென்னும் பொய்யாவிளக்கம் இருளறுக்கும்
எண்ணியதேயத்துச் சென்று.

---

* வங்கணம்=உற்றநேசம், சிநேகம்.

9. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற்கூரியதில்.

10. சிந்தையோர் சிறிதென்னினும் சேர்ந்தது,
கந்தை யுடைதைக் காணுறக் காட்டுமால்
அந்தமான அணிமணியாடைதான்
வந்தவாமிழி வியாவுமறைக்குமே.

---

THE STORY OF VARAGUNA PANDYA.
THE TRADITIONAL SANCTITY OF MADHIARJUNAM.*

## வரகுணபாண்டியர் சரித்திரம்.

### மத்தியார்ச்சுன மான்மியம்.

பத்தியாவது ஈசனிடத்துத் தியானபூசனாதிகளாலே இடையறாதே செலுத்தும் அன்பாம். அவ்வன்பானது தாய் தன் சிசுவினிடத்து வைத்த நேயத்தையும் கற்புடை மகளிர் தமது உயர்த்[illegible]ரிடத்து வைத்த காதலையும் ஈன்றதாய்ப் பசு தன் இளங்கன்றினிடத்து வைத்த ஆவலையும் ஒக்குமென்பர். இவ்வன்பைச் செலுத்துமிடத்து, உள்ளமுருகிக் கரைந்தோட நம்பரமபிதாவாகிய கடவுள் நமக்குப் புரிந்தருளியிருக்கும் எண்ணிறந்த நன்றிகளையுணர்ந்து, அவரது ஆணைக்குட்பட்டு, அவரை உகப்பித்து அவரது அருளைப்பெறுமாறு செலுத்தல்வேண்டும். என்னை! அனாதியாக ஆணவ மலத்தழுந்தி அசேதனம்போலச் செயலற்று இருளில் மூழ்கி எதற்கும்பயனின்றிக் கிடந்த நம்மை எடுத்துத் தனுகரண புவன போகங்களைக் கொடுத்தருளிச் சிற்றறிவுறுத்தி இருவினைப் பயன்களை யுண்பித்து இருவினையொப்பும் மலபரிபாகமும் எய்திய காலத்து அருட்குருவாகத் தோன்றி ஆன்மஸ்வரூபத்தையுணர்த்திப் பாசமுத்தியும் சிவத்வாபிவியக்தியுமுண்டு பண்ணித் தனக்குச் சமனாகச் செய்யும் இப்பேருதவியை உள்ளபடி உணர்பவர்களுக்கு இவ்வன்பு எங்ஙனம் வாராமற் போகும்? ஒவ்வொரு மதஸ்தரும் ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு பாஷையிலும் ஒவ்வொருகோடியாக உரைப்பதும் இதுவேயாகும். தேவாரம், திருவாசகம், சிவானந்தலகரி முதலிய திருவருட்பாக்கள் முழுதும் இவ்வன்பையே சிரப்பிக்கும். ஆசாரிய சுவாமிகள் இவ்வன்பின் தன்மையை யெவ்வாறு எடுத்து விளக்குகின்றனர் பாருங்கள்.

" அங்கோலந்தனை வித்தும் அயக்காந்தந்தனை யூசியரிய கற்பின்
மங்காதமடவாறன் மணமகனைக்கொடிமரத்தை வழிக்கொளாறு
தங்காதுமறிகடலைச்சார்ந்திடல்போற் பசுபதியின் சரணமென்னும்
பங்கேருகமென்மலரை மனஞ்சார்தல் பத்தியெனப்பகரலாமே."

அதாவது, அழிஞ்சிவித்தானது மரத்தையும், அயக்காந்தம் ஊசியையும், கற்பின் வழுவாத உத்தமமாது தனது கணவனையும், கொடியானது மரத்தையும், நதியானது கடலையும் எவ்வாறு இயற்கையிலேயே அடைகின்றனவோ, அவ்வாறே நம்மனமும் பசுபதியின் தாமரைபோன்ற பாதங்களிற் சென்றடைந்து தங்கியிருத்தலே பத்தியென்று கூறப்படும் என்று அப்பத்தியின் இயலைக் கூறியிருக்கின்றனர். இப்பத்திக்குச் சான்றாக இவ்வுலகின்கண்ணே எண்ணிறந்த பெரியோர்கள்தோன்றியிருக்கின்றனர். அப்பத்திமான்களிற் சிறந்தோராகிய வரகுணபாண்டியரென்னும் பாண்டிநாட்டரசருடைய விருத்தாந்தத்தை

* Otherwise called Tiruvidamaruthur.

பண்டிதசிரேஷ்டராகிய ம-ா-ா-ஸ்ரீ, சாமிநாதய்யர் அவர்களது மத்தியார்ச்சுனமான்மியத்தில் நின்றும் எடுத்து அடியில்வரைகிறோம்.

பாண்டி நாட்டிலே, மதுராபுரியிலே, வைதிகநெறியும் சைவநெறியுந் தழைத்தோங்க அரசியற்றிய வரகுணபாண்டியர், ஒரு நாள் காட்டிற்சென்று, வேட்டையாடி விரைந்து திரும்பி வருகையில் சூரியாஸ்தமய மாயிற்று. அப்போது, வழியிலயர்ந்து கிடந்த ஒரு பிராமணன் அவனேறிய குதிரையினால் மிதிக்கப்பட்டு இறந்தான். இராஜா, அதனை யறியாது தமது நகரத்தை யடைந்தார். பிரமகத்தி அவரைப்பற்றி மிகவருந்தியது. அதனால் அவர் மனநொந்து, பல தானதருமங்களைச் செய்து வந்தார். ஒன்றினாலும் அது தீராமையால், பின்பு தமது குலதெய்வமாகிய சோமசுந்தர மூர்த்தியைப் பிரார்த்தித்துக்கொண்டு வருநாளில், ஒரு நாள் சிவபெருமானுடைய திருவருளினாலே, "வரகுண! இன்னும் சிலநாளில், நீ மத்தியார்ச்சுனமடைவை; அப்பொழுது இது தீரும். நீ கவலைப் படவேண்டாம்." என்று ஆகாசத்தில் ஓரசரீரி யுண்டாயிற்று. இராஜா அதுகேட்டு மகிழ்ச்சியுற்றிருந்தனர். சில நாளைக்குப்பின், சோழராஜன் யுத்தஞ் செய்தற்குவர, அரசர் அவனோடு யுத்தஞ் செய்து, அவனைத் துரத்திக்கொண்டே வந்து, இந்த மத்தியார்ச்சுன ஸ்தலத்தை யடைந்தார். அடைந்த தினம் குருபுஷ்யமாதலால், நிரம்ப மகிழ்வுற்று, விதிப்படி புஷ்யதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி, அளவிறந்த தானங்களை அந்தணர்க்களித்து, பின்பு காருண்யாமிர்தத்திலும் ஸ்நானம்பண்ணி திருக்கோயிலுக்குள்ளே செல்லுகையில் அப்பிரமகத்தி நடு நடுங்கி வெளியே நின்றுவிட்டது. அரசர் மகிழ்ந்து, விதிப்படி சுவாமியையும் அம்பிகையையுந் தரிசித்து இந்த ஸ்தலத்திலே, என்றும் வசித்தல்வேண்டுமென்னும் குறிப்புடையவராய், சிவபெருமான் கட்டளைப்படி மேலைவாயில் வழியே சென்று, திருவீதியில் ஒருபக்கத்தில் ஒரு மாளிகை கட்டுவித்து, காலந்தோறும் சென்று, சுவாமி தரிசனத்தோடு நூறு அசுவமேதப் பிரதக்ஷணமும் செய்துகொண்டு அம்மாளிகையிற்றங்கி அரசியற்றுவாராய், பின்பு மேலைக்கோபுரத்தைத் தம் பெயராற் கட்டுவித்து, திருக்கோயிலுக்கு வடக்கே சோமசுந்தரக் கடவுளுக்கு ஓராலயம் இயற்றுவித்து, இன்னம் பலபல பணிகளியற்றிக்கொண்டிருந்தார்.

இப்படி யிருக்குங்காலத்தில் ஒருதினஞ் சென்று நமஸ்காரம் செய்யும்பொழுது, மருதவாணர், "வரகுண! கைலையங்கிரியின் கொடுமுடியை யொப்ப ஒருமதில் கட்டுவித்து அதை வலஞ்செய்தி; அதைச்செய்யு மொரு பிரதக்ஷிணம், ஆயிரம் பிரதக்ஷிணத்திற் கொப்பாம்: நமக்கு மிகவுவப்பாம்" என்றருளக் கேட்டு, அரசர் அவ்வாறே புரிவித்து வலம் வருவாராயினர்.

பின்னொரு நாள், கொடிய கள்வனொருவனைச் சிரச்சேதஞ் செய்தற்பொருட்டுக் காவற்காரர்கள் இறுகக்கட்டிக்கொண்டு செல்லுகையில், அவன் நெற்றியில் திருநீறு விளங்குவதைக்கண்டு கட்டவிழ்த்து விடுவித்து, அவனுக்கு வேண்டும் பொருளளித்து நயமொழி புகன்று விடுத்தனர்.

பின்னொரு நாள் இரவிலே நரிகள் ஊளையிடுதலைக்கேட்டு இவைகள் ஆலவாயானை யழைக்கின்றனவென்று மனமுருகிப் பிடித்துவருவித்து, நல்ல வஸ்திரங்களாலவற்றைப் போர்த்துவிடுத்தனர்.

பின்னொரு நாள், ஒரு தடாகத்தில் தவளைகள் சத்தித்தலைக்கேட்டு, இவைகள் "ஹர ஹர" என்று சத்திக்கின்றனவென்று கருதி, இரத்தினங்களையும் சுவர்ணங்களையும் அத்தடாகத்தில் வாரியிறைத்தனர்.

பின்னொருநாள் திருமஞ்சன தைலத்திற்காக உலர்த்திய எள்ளைக் கோயில் வேலைக்காரனொருவனெடுத்துண்பதைக்கண்டு, "நீ இதை

உண்ணலாமோ" என்றனர். அவன் எள்ளுண்ட கடனைத் தீர்க்கவேண்டும் என்னும் பழமொழிப்படி மருதவாணர்க்கு மறுபிறப்பிலும் அடிமையாய் வருதற்பொருட்டு உண்கின்றேன்" என்ன, அப்படியாயின் எனக்கும் இதிற்சிறிது கொடு" என்று சொல்லி அவன் எச்சிலெள்ளை வாங்கியுண்டனர்.

பின்னொருநாள் தலையோடொன்று இந்த க்ஷேத்திரவெல்லையிற் கிடத்தலைக்கண்டு, மனமுருகி, அதைத் தமது மலர்க்கரத்தாலெடுத்து, கண்ணீர் வெள்ளத்தாலாட்டி "உம்மைப்போலத் தமியேனும் இந்த ஸ்தலத்தெல்லையில் எந்தலை கிடக்கப்பெறுவேனோ என்று மனமுருகினர்.

பின்னொருநாள் திருக்கோயிலின் முன்னே நாய் மலங்கிடத்தலைக்கண்டு, இதையெடுப்பவருக்கு "என் தேசத்திற் காற்பங்கு கொடுப்பேன்" என்று எண்ணி முதற்பிரதக்ஷிணமும் அது எடுக்கப்படாமையால் அரைப்பங்கு கொடுப்பேன்" என்று இரண்டாம் பிரதக்ஷிணமும், "முக்காற்பங்கு கொடுப்பேன்" என்று மூன்றாம் பிரதக்ஷிணமும், "முழுமையும் கொடுப்பேன்" என்று நாலாம் பிரதக்ஷிணமும் செய்தார். அதுவோ எடுக்கப்படவில்லை. அது கண்ட அரசர் "என் தேசம் எனக்கே யுரியது" என்று சொல்லி அதைத் தமது திருக்கரத்தினால் எடுத்துப் புறத்தே எறிந்தார். பின்னொருநாள் திருவீதிப்பிரதக்ஷிணம் செய்யும்பொழுது பழுத்த வேப்பமரங்கள் வெயிலில் நிற்றலைக்கண்டு, "அந்தோ! சிவலிங்கத்தை யொத்த திருவுருப்பலவற்றைத் தாங்கிய இவைகள் வெதும்புகின்றனவே" என்று இரங்கி, அம்மரங்களுக்கெல்லாம் மேற்கட்டி கட்டுவித்தனர்.

பின்னொருநாள் தாம் விவாகம் செய்து கொண்ட சோழராஜன் புத்திரியை இரவில் அந்தப்புரத்திற்கண்டு, "இவள் எம்பெருமானுக்கே யுரியவள்" என்று நினைந்து, உடனே ஒருவரும் அறியாவண்ணம் அழைத்துக் கொண்டு ஆலயத்தை யடைந்து திருமுன் நின்று, "மருதவாணா! இப்பெண் மணியை யங்கீகரித்தருள்க" என்று பிரார்த்தித்து, கதவைத்தட்டி அழைக்க; சிவபெருமான் கதவைத்திறந்து, "வரகுணா! வருதி" என்றழைத்தார். அப்போது பாண்டியர் "ஸ்வாமி, இப்பெண்மணியை யங்கீகரித்தருள்க" என்று பிரார்த்திக்க, எம்பெருமான் வலக்கைமாத்திரம் வெளியே தெரிய அப்பெண்மணியை உட்கொண்டருளினர். அரசர் அதுகண்டு, "இந்தக்கையை மாத்திரம் எளியேனால் தீண்டப்பட்டதென்றோ நீக்கியருளினீர்," என்று மனந்தளர, சிவபிரான் "உன்னன்மை உலகத்தார் அறியும்படி இக்கையை நாளை அங்கிகரிப்போம்" என்று கட்டளையிடுதலும், அரசர் மகிழ்ந்து வெளியேவந்தார். திறக்கப்பட்ட கதவுகள் முன்போலவே மூடப்பட்டிருந்தன. அரசரையும் தேவியையும் மனையிலுள்ளோர் தேடிப் பின்பு அரசரைமட்டுங் கண்டு, "தேவியார் எங்கே?" என்ன, அவர் "மகாலிங்க மூர்த்தியினிடத்தில் இருக்கிறார்" என்றார். அவர்கள் ஆச்சரியமுற்று, பூசிப்பவர்களோடு உள்ளேபுகுந்து, மகாலிங்கப்பெருமான் முடிமீது கைவிளங்குதலைக் கண்டார்கள். சிவபிரான் உடனே அக்கையை உள்ளே வாங்கியருளினர். அதுகண்ட அரசர்மகிழ்ச்சியடைய மற்றவர்கள் அச்சமும் அதிசயமும் அடைந்தார்கள். தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள்.

இவ்வாறு பல நாள் இந்நகரில் வசித்துக் கொண்டிருந்து, மருதவாணர் கட்டளையின்படி தமது மதுராபுரியை யடைந்து, சோமசுந்தர மூர்த்தி சிவலோகங்காட்டி யருளத் தரிசித்து பலநாள் அரசாட்சிசெய்து சிவபதமடைந்தனர்.

THE HYMNS OF THE VEDAS.

## வேதமந்திரங்கள்.

ஆரிய மதக்கிரந்தங்களாகிய வேதசாஸ்திரங்களில் நம்மெல்லோருக்கும் பொதுவாக ஒரு விசுவாசமும் அபிமானமு மிருப்பினும், நம்மில் அநேகருக்கு அவற்றின் விவரம் செவ்வையாகத் தெரியாதென்பது நிச்சயம். வேதாத்தியயனம்செய்து அவ்வேதங்களை மனப்பாடம்பண்ணின அநேக வேதியர்கள் கூட அவற்றின் பொருளை விவரமாக அறிவதில்லை; யாராயினும் ஆயிரத்தி லொருவர் பொருளறிந்து படிப்பினும் அப்பொருளைத் தாமே யோர்ந்து மகிழ்தலல்லாமல் பிறருக்கு விளங்கப் போதிப்பதில்லை. ஆதலின் அவ்வேதங்களைப் பெயர் மாத்திரமாயன்றி பொருளும் பயனும் உய்த்துணர்ந்தறியாத எம்போலியோருக்குப் பயன்படும்படி விவரித்துள்ள ஐரோப்பிய சம்ஸ்கிருத பண்டிதர்களில் ஒருவராகிய மானியர் வில்லியம்ஸ் (Monier Williams) என்னும் மஹா பண்டிதரின் 'இந்தியர் ஞானம்' (Indin Wisdom) என்னும் கிரந்தத்திலிருந்து பின்வருவனவற்றைப் பலருக்கும் உபயோகமாகுமென்று கருதி எழுதப்புகுந்தேன். இதனால் நமது மதக்கோட்பாடுகளும் நம் பூர்வீகருடைய விருத்தாந்தங்களும் நாம் ஒருவாறு தெரிந்துகொள்வதன்றி, நம் மதத்துக்குப் புறம்பாகிய ஐரோப்பியர்களின் அபிப்பிராயமும் தெரிந்துகொள்ளலாகும்.

ஆரியர்களாகிய நம் முன்னோர்களும், அவ்வாரிய சந்ததியேயென்று சொல்லும் ஐரோப்பியரின் முன்னோர்களும், அநேக நூற்றாண்டுகளுக்குமுன், ஆசியா கண்டத்தின் மத்தியப் பிரதேசத்தில், ஆக்ஸஸ் நதியின் உற்பத்திக்கருகே ஓரினமாகக்கூடி வாழ்ந்ததாகவும், பின்பு காலக்கிரமத்தில் ஒருவரை யொருவர் விட்டுப்பிரிந்து வெவ்வேறிடங்களிற் குடியேறினதாகவும் சொல்லுவர். இது உண்மையாயின், நம்மவர்களைப்போல மற்றவர்கள் தமது பூர்வீக மதாசாரங்களைப் போற்றவில்லையென்பது சித்தம். நமது மதம் எவ்வளவாக மாறினும் நாம் நம் முன்னோர் வழிபட்ட வேத தெய்வங்களையாவது ஆசாரங்களையாவது முற்றும் துறந்துவிடவில்லை. ஐரோப்பிய ஆரியர் தமது பூர்வாசாரங்களை முழுதும் கைவிட்டு, யூதருடைய மதக்கோட்பாடுகளையும் ஐதிகங்களையும் ஸ்வீகரித்து, அம்மதத்தின் கிளையாகிய கிறிஸ்தவ மதத்தை அவலம்பித்தனர். நாமோ இந்திரன் வருணன் வாயு முதலான தெய்வங்களைச் சற்றும் துறந்துவிடாமல் இன்றும் வணங்கிவருகிறோம். இதுபோலவே பாஷையையும் கைவிடாமற் போற்றிவருகின்றோம். ஆயினும் இதுபற்றி நமக்குப் பெருமையேயன்றி எள்ளளவேனும் குறைவாகாது. வேதம் பௌருஷேயமோ, அபௌருஷேயமோ, தெய்விகமோ, மானுஷிகமோ, ஒருவர் செய்ததோ பலர் செய்ததோ; ஒருகாலத்ததோ பலகாலத்ததோ யாதாயினும் ஆகுக. அதனை அரைகுறையாக மறுமொழியிற் படிப்பினும் கூட அதன் பெருமையும் பயனும் விளங்காமற்போகாது. இம் முகவுரையுடன் இனி மானியர் வில்லியம்ஸென்னும் பண்டிதர் சொல்லும் விஷயங்களை இரண்டு மூன்று சஞ்சிகைகளில் விவரித்திடுவேன்.

---

I.

வேதங்கள், இந்து மதத்துச்கும் ஆரிய நூல்களுக்கும் அஸ்திபாரமாயுள்ளன. வேதமென்பதற்குப் பொருள் ஞானம் என்றும். அதாவது எட்டிலெழுதாப் பரஞானமாம். இந்துக்கள் கொள்கைப்படி, இவ்வேதங்கள் அநாதிநித்தனாகிய கடவுளினின்றும் சுவாசம்போலத் தோன்றி ஒரு புருடற்கு ஏகதேசத்தில் உபதேசிக்கப்படாமல், இருடிகள் என்னும் ஓரினத்தாருக்குப் பொதுவாக உபதேசிக்கப்பட்டனவாம். இவ்வாறு பெறப்பட்ட இப்பிரமவித்தையானது இவர்களாலே ஏனையோருக்கு அக்ஷரரூபமாக எழுதிக்கற்பிக்கப்

படாமல் செவி வழியாகப் பன்முறை ஓதுவித்துக் கற்பிக்கப்பட்டது. வேதம் சப்தரூபமாக ஓதிப்படித்தலே யன்றிப் புஸ்தகரூபமாக எழுதிப்படிக்கும் சம்பிரதாயமில்லை. இவ்வேதங்களைத் தமக்கே உரியவாகக்கொண்ட அந்தணர்கள் இவற்றை எழுதிப்படித்தல் கூடாதென்று மறுத்தபோதினும் இவை நாளுளும் பெருகி ஓதியுணர்த்தல் அதிப்பிரயாசமான போது இவை பல திருமுறைகளாக வகுக்கப்பட்டன. வேதத்தின் உற்பத்தியைப் பற்றி இந்துக்கள் யாது கூறினும், உண்மையை ஆராயுங்கால் இத்திருமுறைகள் அநேக நூற்றுண்டுகளுக்கிடையே பற்பல கவிகளாலும் புலவர்களாலும் பற்பல சமயங்களில் இயற்றப்பட்டவைகளேயாம். இவ்வேதங்கள் திருமுறைகளாக வகுக்கப்பட்ட பின்னரும் இந்துக்களில் பெரும்பாலாருக்கு இவை பெயர் மாத்திரையாகவே யிருந்தன. உபநிடதங்கள் என்னும் சில பிற்பட்டியற்றிய வேதபாகங்களைத்தவிர, இவ்வேதங்கள் எவ்வளவாகக் கௌரவிக்கப்பட்டு சுருதிப்பிரமாணத்தைக் கடந்த தொன்றில்லையென்று மேன்மைப்படுத்தப்படினும் இன்றைக்கும் கற்றறிந்த பண்டிதர்கள்கூட மற்றப்பாகங்களை அநேகமாகப் படிப்பதில்லை.

இவ்வேதங்கள் மூவகையாகப் பிரிக்கப்படும். அவை யாவன (1) மந்திரங்கள், இவை தோத்திரப் பிரார்த்தனைகளாகிய கீர்த்தனங்கள். (2) பிராமணங்கள், இவை கர்மாநுஷ்டானங்களைக் கற்பிக்கும் விதிகளும் திருஷ்டாந்தங்களுமடங்கிய வசனரூபமான புஸ்தகங்கள். (3) உபநிடதங்கள், இவை மறைபொருளான ரகஸ்யங்களை விவரித்துப் பெரும்பான்மை வசனரூபமாகவும் சிறிது செய்யுளாகவும் முற்கூறிய பிராமணங்களுக்கு அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டவை.

இனி இவற்றை முறையே ஆராய்வோமாக. மந்திரங்கள், என்பவை, இந்து ஐரோப்பியரென்னும் இனத்தாரின் ஓர் சாகையாகிய இந்துக்கள் கடைசியாக வட இந்தியாவில் குடியேறிய காலத்துக்குப் பிற்பட்டுச்சேர்த்துத் திரட்டி யளிக்கப்பட்ட பிரார்த்தனைத் தோத்திரங்களாகிய கீர்த்தனங்கள். இவை கிறிஸ்து சகத்துக்கு முன், 1500-க்கும் 1000-க்கும், இடையே பற்பல காலங்களில் ஒருவர்பின் னொருவராகத்தோன்றிய பல வித்துவான்களால் இயற்றப்பட்டவை யென்பதிற் சிறிதும் ஐயமில்லை. இவை காவியச்சிறப்பில் ஒன்றுக்கொன்று உயர்வுதாழ்வாக வேறுபட்டும், பல விடங்களிற் கூறியதே கூறி அநாவசியமாய் விரிக்கப்பட்டும், சிற்சில விடங்களில் இளம்பிள்ளைகளுக் கருகமாகிய எளிய கருத்துக்களையுடையவாயும் இருப்பினும், கிரேக்கர், உரோமர் முதலான ஐரோப்பிய ஜாதியாருக்கு மூலபுருஷர்களாகிய முற்காலத்து ஆரியர்கள் ஆரம்பத்தில்கொண்டிருந்த மதக்கொள்கைகளையும் பாஷாரூபங்களையும் உள்ளடக்கியிருத்தலின் நாம் இவற்றை மிகவும் முக்கியமாகக் கவனித்து ஆராயத்தக்கது.

இம் மந்திரங்கள், இருக்கு, சாமம், அதர்வணம், தைத்திரீயம், வாஜசநீயம் என்னும் ஐந்து சங்கிதைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் ஆயிரத்துப்பதினேழு கீர்த்தனைகள் அடங்கிய இருக்கு வேதசங்கிதையானது மற்றெல்லாவற்றிலும் பழமையானதும் பிரதானமானதுமாம். அதர்வண வேதசங்கிதை எல்லாவற்றிலும் புதியதும் யாம் கவனிக்கத்தக்கதுமாகும். இவை யிரண்டுமே சங்கிதைகளில் முக்கியமானவை.

இனி இச்சங்கிதைகளில் துதிக்கப்படும் தெய்வங்கள் யாவை? இவ்விஷயம் நாம் நன்குயறிந்து கொள்ளத்தக்கது. ஏனெனில் நமது முன்னோர்களாகிய பூர்விக ஆரியர்கள் மத்திய ஆசியாவில் ஆக்ஸஸ் நதியின் உற்பத்திக்குச் சமீபத்தில் பொக்காரா தேசத்தில் வசித்துவந்தகாலத்தில் வெகுவாக இத்தெய்வங்களையே இவைபோன்ற பெயர்களால் வழிபட்டிருக்கக்கூடும். ஆதலின் அக்கேள்விக்

குத்தக்க விடைபகர்தல் அவசியமாகும். ஆகமத்துணையாலன்றிப் பிரத்தியக்ஷத்தையே பிரமாணமாகக்கொண்டு வழிபடுவோர்கள் அனைவரும் சகஜமாக வணங்குவதும், நாகரீகத்திலும் அறிவிலும் சிறந்தவராலும்கூட பயபக்தியோடு பாவிக்கப்பட்டதுமான பூதசத்திகளையே இவர்கள் வழிபட்டுவந்தார்கள். ஆரியாதேச வாசிகளாகிய இவ்வாரியர்களுக்குக் கடவுளின் சத்தி பூதசத்திகளில் நம்மிலும் மிக ஸ்பஷ்டமாக விளங்கியது. நிலங்கள், வீடுகள், ஆநிரைகள், ஆட்டுமந்தைகள், மனிதர்கள், ஜீவராசிகள் ஆகிய ஒவ்வொரு பொருளும் ஐரோப்பிய தேசங்களிலும் இங்கு காற்று, நெருப்பு, நீர், மழை முதலியவற்றால் அதிகமாக அடிக்கடி பாதிக்கப்படுவன. சூரியகிரணங்கள், ஐரோப்பிய தேசங்களில் நாம் அநுபவித்தறிவதிலும் அதிகமான சத்தியை உடையனவாகத் தோனுவ ஆதலின் இந்தப் பூதசத்திகள், பலவிதமாகத் தோன்றும் ஒரே தெய்வத்தின் சாகித்தியமாகவோ அல்லது ஒன்றை யொன்று மீறும்படிப்போராடும் பல தெய்வங்களின் சாகித்தியமாகவோ அவர்களால் கொள்ளப்பட்டது ஆச்சரியமல்ல. இந்தப் பூதசத்திகள் முதல் முதல் கவிகளால் புருஷாகாரங்களாகக் கற்பிக்கப்பட்டு, உருவம் குணம் குறிகளை யேற்றபின்பு தெய்வங்களாக வணங்கப்பட்டதும் புதுமையல்ல. இவ்வாறு தெய்வங்களாகக் கற்பிக்கப்பட்ட காற்று, மழை, இடி, மின்னல், அக்கினி முதலிய ஒவ்வொரு சத்திக்கும் அவை தோன்றும் விதத்தையும் காலத்தையும் பற்றி வெவ்வேறான பெருமை சிறுமைகளும் கௌரவங்களும் அளிக்கப்படுதலும் இயல்பேயாகும்.

இப்பூதவணக்கமே வேதங்களிற் கூறியுள்ள மதமாகும். இதுவே கி. மு. 12, 13, நூற்றாண்டுகளுக்கு முன்னர் இந்து ஆரியர் கைக்கொண்டிருந்த மதமுமாகும். முதல் முதல் தெய்வமாகப் பாவித்து வணங்கப்பட்ட சத்திகள் வானிலும் காற்றிலும் சாகித்தியமானவையென்று தோன்றும். மதவிஷயமான பாவனைகளுக்கு ஒரு உருவம் கற்பிக்கும்போது அவற்றை தெய்வமாகப் பாவித்தல் இயற்கை. ஆதலின் இச்சத்திகளும் தெய்வங்களாகவே பாவிக்கப்பட்டன. இப்போது இந்துக்கள், கண்ணுக்குக் கோசரமான அவையவப் பொருள்களைக்கொண்டல்லாமல் நிரவ்யவியாகிய ஈச்வரனைத்தியானிக்கப் போதுமான வல்லமை நமக்கில்லை யாதலின் அவையவங்களின் உதவி வேண்டுமென்று கருதுகின்ற பாமர ஜனங்களின் மனசுக்குப் பொருத்தமானபடி, எண்ணிறந்த உருவங்களையுடைய எண்ணிறந்த தெய்வங்களை நம்பியிருப்பினும், ஆதியில் ஆரியர்கள் ஒரு தெய்வத்தையே வணங்கினார்களென்று ஊகிக்கத்தக்கது. தற்காலத்திலும் இந்துக்களுக்குள்ளே தத்துவமறிந்தவர் இவ்வெண்ணிறந்த தெய்வக்கும்பலூடே ஏகமாய், சுயம்புவாய், பரிபூரணமாயிருக்கும் ஒரே வஸ்துவே தெய்வமென்றும், பலபிரகாரமாகக் காண்கின்ற உருவங்களெல்லாம் அத்தெய்வத்தின் வேறுபாடுகளென்றும் கருதுகின்றார்கள்.

வேதத்தில் இந்த ஏகமான வஸ்துபாவனையானது சிறிதுகாலத்துக்கெல்லாம் பற்பல கிளைகளாகப் பிரிந்துவிட்டது. வேதமந்திரங்களில் சிலவற்றில் மாத்திரமே சுவயம்பிரகாசமாக விளங்கும்சர்வபரிபூரணராகியகடவுளின் ஏகபாவத்துவம் காணப்படுகின்றது. இவற்றில்கூட இப்பாவம் உண்டோ இல்லையோவென்று அனுமானிக்கும்படி அரைகுறையாகக் காணப்படுகிறதேயன்றி ஸ்பஷ்டமாகத் தோன்றவில்லை. எல்லாவற்றிலும் முந்தினதும் இனியதுமான ஈச்வரபாவனை தந்தையாக கற்பிக்கப்பட்ட 'தையஸ் பித்ரு' என்னும் பாவனையாகும். இந்தத் தையஸ்ஸோடு நெருங்கிச் சம்பந்தப்பட்டது எல்லையில்லாப்பரப்பு என்னும் பொருளைக்குறிக்கும் அதிதி என்னும் தேவதை. இவள்தான் தேவர்களுக்கெல்லாம் நற்றாயாகப் பின்னர்க் கருதப்பட்டவள். இதன்பின் இப்பாவனையே விரிந்து தெய்வம் வருணனென்னும் பெயராலே பாவிக்கப்பட்

டது. 'இவ்வருணன் மித்திரனென்னும் தெய்வத்தோடுகூட்டிக் கருதப்பட்டனன். பின்பு இக்கற்பிதங்களாகிய தெய்வங்கள் சாதாரண ஜனங்களுக்குப் பத்தி விசுவாசத்தை உண்டு பண்ணப் போதுமான குறிகள் உடையனவல்லவென்று கருதப்பட்டு, ஆகாயத்தில் பற்பல லோகங்களும் பற்பல தெய்வங்களும் அவ்வவற்றிற்குரிய குணங்களோடும் சத்திகளோடும் கற்பிக்கப்பட்டன. முதலில் ஜலமயமாகிய ஆகாயம் இந்திரனென்னும் பேரால் ஒரு தெய்வமாகக் கற்பிக்கப்பட்டு, அத்தேவன் என்றும் தனது மழையாகிய செல்வத்தை உலகுக்குப் பயக்க எண்ணுவதாயும் அதற்கிடையூறாக விருத்திரன் என்னும் ஓர் அசுரன் அவன் முயற்சியைத் தடுப்பதாயும் பாவிக்கப்பட்டது. பின்பு காற்றானது வாயுவென்னும் ஒரே தெய்வமாகவும் மருத்துக்கள் என்னும் பல தெய்வங்களாகவும் கற்பிக்கப்பட்டது. எங்கும் ஏகமாய் நிற்பது வாயு. பற்பல திசைகளிலும் பற்பல விதமாக வீசுகின்றவை மருத்துக்கள். இவ்வாறு தெய்வங்களைப் பிரித்து விவரிக்குங் காலையில் பூர்வம் முழுதும் அந்தரவாசியாகப் பாவிக்கப்பட்ட வருணன், முதலில் எழுவராகவும் பின்னர் பன்னிருவராகவும் கற்பிக்கப்பட்ட ஆதித்தியர்களில் ஒருவரின் தானத்தில் வைக்கப்பட்டுக் கடைசியில் ஆகாயத்தைவிட்டுப் பூமியில் பிரவேசித்த ஜலநிதிகளுக்கு அதிபதியாகவும் பாவிக்கப்பட்டனன்.

S. M.

(இன்னும் வரும்.)

---

EXTRACT.

## "வியவசாய பாங்கிகள்."

---

### இந்தியா கவர்ன்மேண்டார் நியமித்த கமிட்டியாரின் ரிபோர்ட்டு.

இந்தியாவில் வியவசாயிகளுக்குக் கடனுதவி செய்யும்பொருட்டு சல்லிசான வட்டிக்குக் கடன் கொடுக்கும் நிதிகள் அங்கங்கே ஏற்படுத்துவதற்காக தக்க ஏற்பாடு செய்யவேண்டியதைப்பற்றி யோசித்து ரிபோர்ட்டு செய்யும்பொருட்டு இந்தியா கவர்ன்மெண்டார் ஒவ்வொரு இராஜதானியிலுமிருந்து ஒருவரைத் தெரிந்தெடுத்து ஒரு கமிட்டி நியமித்தார்கள். அக் கமிட்டியார் தீர்க்காலோசனை செய்து முடிவுபண்ணிய விஷயங்களை ஒரு ரிபோர்ட்டாக எழுதி இந்தியா கவர்ன்மெண்டுக்கு அனுப்பியிருக்கிறார்கள். அந்த ரிபோர்ட்டிலடங்கிய விஷயங்களின் சாரசங்கிரக மின்னதென்று உணர்த்த வேண்டிய தவசியமாயிருப்பதால் பின்வரும் அந்த ரிபோர்ட்டின் சாராம்சச் சுருக்கத்தை "திராவிட வர்த்தமானி" யிலிருந்தெடுத்து சில அற்பமாறுதல்களுடன் கீழே பிரசுரிக்கிறோம் :—

மேற்கண்ட கமிட்டியார் அவர்கள் ரிபோர்ட்டில், "விவசாய சகாயப் பாங்கிகள்" என்னும் நாமத்தை மாற்றினால் நலமென்றும், இப்பொழுது ஏற்படுத்த உத்தேசித்திருக்கும் பாங்கிகளுக்கு பாங்கிகளென்று பெயர் கொடாமலும், அவைகளின் காரியங்களும், உதவியும் விவசாயத்தையொட்டியவைகளாய் மாத்திரமே நில்லாமல், இன்னும் சில காரியங்களுக்கும் அநுகூலமாயிருக்கவேண்டுமென்றும் சிபார்சு செய்திருக்கிறார்கள். இவைகளுக்கு, பரஸ்பரோபகார நிதிச் சங்கங்களென்று பெயர் கொடுத்தால் நலமென்றும் (Co-operative Credit Societies), நாட்டுப்புறங்களில் மாத்திரமல்ல, பட்டணங்களிலுங்கூட ஐக்கிய பரஸ்பர சகாயநிதிகள் ஏற்படுத்த முயற்சிகள் செய்யவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். மேற்கூரிய வேற்பாட்டின் காரியங்கள் விவசாயத்துடனும், நாட்டுப்புறங்களோடும் நில்லாமல் பரவவேண்டுமென்பதற்குக் காரணம், இத்தாலியா நாட்டில் இவைபோன்ற சங்கங்கள் ஏற்பட்டிருப்பதும், நமது சென்னையில் ஏற்பட்டுள்ள நிதிகளைப்பற்றி மேற்படி சபையில் கனம். நிக்கல்ஸன் துரையவர்கள் கூறியதுமே. பட்டணங்களிலுள்ள நிதிகள், சுற்றுப்பக்கத்திலுள்ள நாட்டுப்புறங்களில் விவசாயவிஷய உதவிக்கென்றே ஏற்பட்டிருக்கும் சங்கங்களுக்குக் கடன்கொடுத்துத் திரவிய சகாயம் செய்துவருமென்று எண்ணப்படுகிறது. மேற்படி சபையார், இச்சங்கங்கள் இரண்டுவகைப்பட்டவைகளாயிருக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். பட்டணங்களிலுள்ளவைகளில் மூலதிரவியம் பெரும்பாலும் அவைகளில் சேருபவர்களிடமிருந்து ஷேர்களாக வசூலாக்கப்படுமென்றும், சாதாரண பாங்கிகளைப்போலவே, பாங்கிகள் விழுந்துபோனால் அவர்கள் இவ்வளவு கடனுக்குத்தராதிகள் என்றும் நிர்ணயங்

கொண்டு நடத்தப்பட்டுவருமென்றும்; நாட்டுப்புறங்களின் சங்கங்களிலோ முதல் தொகை அவைகளைச் சேரும் மெம்பர்கள் டிபாசிட்டு செய்யும் தொகையேயென்றும் சொல்லுகிறார்கள். இந்த இரண்டு ஏற்பாடுகளிலும், மெம்பர்களல்லாதவர்களுடைய டிபாசிட்டு தொகைகளினாலும், வேண்டுமானால் சர்க்காரிடமிருந்து கடன்கள் வாங்கியும், சங்கங்களின் முதலை அதிகரிக்கச் செய்யப்படலாம். மேற்படி நிதிச்சங்கங்களில், ஒவ்வொன்றிலும் உள்ள மெம்பர்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாயிருக்கவேண்டும். ஏனெனில், அப்பொழுதுதான் அவர்கள் அச்சங்கத்தின் விஷயங்களில் பரஸ்பரமான மேல்விசாரணை செய்துவருவார்கள். ஆகையால் மெம்பர்கள் எலக்ஷனால்தான் தெரிந்தெடுக்கப்படவேண்டும். அந்தந்த பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ளவர்கள்தான் மெம்பர்களாகவுங்கூடும். இவ்வகைப்பட்ட சங்கங்கள் அபிவிர்த்தியாகிப் பெருக, அவைகளுக்குச் சர்க்காரார் சில அநுகூலங்கள்செய்து கொடுக்கவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். அவைகளை யேற்படுத்தும் விஷயத்தையும், அவைகளின் காரியங்களையுமொட்டிய தஸ்தாவேஜுகளுக்கு ஸ்டாம்பு செலவு அவசியமில்லை யென்று சர்க்காரார் சொல்லலாம். ஷை சங்கங்களில் மெம்பர்கள் வைத்துள்ள டிபாசிட்டு தொகைகள் இதர கடன் வசூலுக்காக ஜப்தி செய்யப்படக்கூடாதென்றும் ஏற்படுத்தலாம். அன்றியும், இவைகளில் சொல்பவட்டிக்குப் பணம் கொடுப்பதாயிருப்பதனால், கடன் வாங்கிக்கொண்டு தீர்க்காத மெம்பர்களிடத்தில் பணத்தை வசூல்செய்வதற்குக் கஷ்டமும், பணச்செலவும் அதிகமாகாதபடி ஏற்பாடுகள் செய்யலாம். எப்படியென்றால் ஷை நிதிகளிலிருந்து மெம்பர்களுக்கு விவசாயம், அல்லது கைத்தொழில் விஷயமாய் சகாயத்திற்கென்று கொடுக்கப்பட்ட கடன்கள், ஷை நிதிகளின் கணக்குப் புஸ்தகங்களினின்றும் சர்டிபிகேட்டுடன் ஒரு காபி அனுப்பப்பட்டால், அதன் மேலேயே வியவகாரம் உடனே பைசல்செய்யப்படலாம். இதன்றியும் நிலச்சொந்தக்காரனுடைய மேல்வார பாத்தியதை, அல்லது சர்க்கார் கிஸ்தி, வசூல் பாத்தியதை இவைகள்போக, ஷை நிதிகளினின்றுதவிய பணங்கொண்டு பயிரிடப்பட்ட மாசூல், அல்லது வாங்கப்பட்ட பொருள்கள்மேல், நிதிகளுக்கும் பாத்தியதையிருக்கவேண்டு மென்னலாம். ஷை நிதிச்சங்கங்கள்மேல் சர்க்காரார் அதிகாரம் செலுத்துவதையும், மேல் விசாரணைசெய்வதையும்பற்றி அக்கமிட்டியார் கூறுவதாவது: வருஷாவருஷம் ஷை நிதிகளின் கணக்குகள் ஒரு சர்க்கார உத்தியோகஸ்தரால் பரிசோதிக்கப்பட்டு வரவேண்டுமென்றும், ஒவ்வொரு சங்கத்திலும் கமிட்டி சபையில் பெரும் பாலாராவது, அதன் சாதாரண மெம்பர்கள் மொத்தத்தில் பத்தி லொருபங்கார் கேட்டுக்கொண்டாலாவது, தனக்கே வேண்டுமென்று தோன்றினாலாவது ஷை நிதியின் கணக்குகளைப் பரிசீலனை செய்வதற்கு உத்தரவு கொடுப்பதற்கு ரிஜிஸ்ட்ராருக்கு அதிகாரம் இருக்கவேண்டும். தென் இந்தியாவில் அந்தந்த ஜில்லாவில், சாதாரணமாய் ஜில்லா கலெக்டர், அல்லது ஜட்ஜியவர்கள்தான் ரிஜிஸ்டராராக விருப்பார். ஆனால் யாதாவதொரு ஜில்லாவில் ஷை நிதிச்சங்கங்கள் அதிகமாய்ப் பெருகிவிட்டால், இதற்கென்றே ஒரு உத்தியோகஸதரும் நியமிக்கப்படலாம். ஷை நிதிகளில் ஒரு தொகை 'ரிஸர்வாகப்' பிரத்தியேகமாய்ச் சேர்க்கப்பட்டு வரவேண்டுமென்று விதிகள் நிர்ணயிக்கும். அந்த 'ரிஸர்வ் தொகை,' குறிக்கப்பட்ட தொகைக்கு அதிகமாய்ச் சேர்ந்துபோனால், மீதித் தொகையைக்கொண்டு பொது நன்மைக்கான விஷயங்களில் செலவிடலாம். அல்லது, மெம்பர்களுக்குக் கொடுக்கப்பட்ட கடன்கள்மேல் வட்டியைக் குறைக்கலாம்.

மேற்படி நிதிச்சங்கங்கள் ஒவ்வொன்றிலும், காரியங்களை நிர்வகிக்க மூன்று பேருக்குக் குறையாமலுள்ள ஒரு சிறு கமிட்டி யேற்படவேண்டும். அதன் மெம்பர்கள் சாதாரண மீடிங்கில் தெரிந்தெடுக்கப்பட்டவர்களாய் இருக்கவேண்டும். மேற்படி கமிட்டியார், தாங்கள் செய்யும் வேலைக்குப் பதிலாக யாதொரு திரவிய லாபமும் அடையார்கள். ஆனால் மேற்படி சங்கத்தைச்சேர்ந்த உத்தியோகஸ்தர்களுக்கு, நிதியில் பணமிருந்தால் சம்பளம் கொடுக்கக்கூடும்.

அன்றியும் மேற்படி நிதிகள், தங்களிலுள்ள மெம்பர்களில் மூன்றுபேரை மேல் விசாரணைக் கர்த்தர்களாக எலக்ஷனால் நியமித்துக்கொள்ளலாம். இவர்களுடைய கடமையாவது, மேற்படி சங்கத்தின் எல்லாக் காரியங்களும் சரியாய் நடத்தப்பட்டு வருகின்றனவாவென்று பார்த்து வருவதாம். அதில் பிசகுகள் நடந்துவருகின்றனவென்று கண்டால், அந்நிதிச்சங்கத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாரையுங் கூட்டிக் கலந்துபேசலாம். குறிக்கப்பட்ட காலங்களில், கூடும் மீடிங்குகளில்தான், கடன்கள் கொடுக்கும் விஷயம் பேசப்பட்டுக் கடன்கள் தரப்

படும். மேற்படி நிதியில் ஐந்து ரூபாயாவது செலுத்தாதவர்களுக்குக் கடன் கொடுக்கப்படமாட்டாதென் றிருக்கவேண்டும். மேற்படி நிதிகளில், சூதாட்டத்திற்போல் திரவிய இலாபஞ் சம்பாதிக்க நாடுபவர்கள் சேர்ந்து கெடுக்காதபடி, இத்தனை ஷேர்கள் அல்லது வோட்டுகளுக்குமேல் யாரும் எடுத்துக்கொள்ளக் கூடாதென்று ஏற்படுத்தி விடவேண்டும். மேற்படி நிதிகளிலிருந்து ஒரு மெம்பர் என்ன விஷயங்களுக்காகக் கடன் வாங்கலாமென்பதைப்பற்றி, ஒன்றிரண்டு விஷயங்களென்று குறிப்பிடாமல், பல விஷயங்களைக் கூறியிருக்கின்றனர். கடன் வாங்குபவன், விவசாயம் அல்லது யாதாவதொரு தொழில் விஷயத்திற்கென்று வாங்கலாம்; தான் மெம்பராய்ச் சேருவதற்குமுன் பட்டிருந்த கடன்களைத் தீர்க்கப் பணம் வாங்கிக்கொள்ளலாம். குத்தகைப்பணம், அல்லது சர்க்கார் தீர்வை முதலிய செலுத்துவதற்கென்று வாங்கலாம். கலியாணஞ் செய்வதற்குக்கூட வாங்கிக்கொள்ளலாம். ஆனல் இது விஷயத்தில் இரண்டு நிபந்தனைகள் உண்டு. (1) அவன் கடன் கேட்பதற்குமுன், நிதியில் மூன்று வருஷகாலம் ஏதாவதொரு தொகை டிபாசிட்டு செய்துவந்தவனாக இருக்கவேண்டும். (2) அவன் கடன் வாங்கும் தொகை, மேற்படி மூன்று வருஷங்களில் அவன் டிபாசிட்டு செய்து வந்ததால் வருஷத்திற்கு இவ்வளவென்று ஏற்படும் சராசரித் தொகையில் பாதிக்குமேல் இருக்கக் கூடாது. நாட்டுப்புறங்களில் வைக்கப்படும் நிதிகள், நகைகள் மேலாவது, வேறு விலையுள்ள சாமான்கள் மேலாவது கடன் கொடுக்கக்கூடாதென்று கமிட்டியார் சொல்லுகிறார்கள். மெம்பர்கள் கடன் வாங்கினால், அவர்களுக்கு மாசத்திற்கு ரூபாய் ஒன்றுக்கு சாதாரண வட்டி 2 பை வீதத்திற்கு மேற்படாதென்றும், டிபாசிட்டு தொகைகளின்மேல், மாதம் ஒன்றுக்கு ரூபாய் ஒன்றுமேல் ஒரு பை வீதம் வட்டி கொடுக்கப்படும் என்றும் இருக்கும். மேல் கூறப்பட்டுவந்த விதிகள் எல்லாம் ஒரு ஆக்ட்டாக சேர்க்கப்படும். கமிட்டியாரும், அந்த ஆக்டுக்கு மசோதா நகலைச்செய்து இராஜாங்கத்தாருக் கனுப்பியிருக்கிறார்கள். சீக்கிரத்திலேயே அது சட்டமாகிவிடும், ஷை கமிட்டியார் யோசிக்கவேண்டியதல்லா திருந்ததும், நாம் கவனிக்கவேண்டியதுமாகிய வொரு விஷயத்தைப்பற்றிச் சிபார்சு செய்திருக்கிறார்கள். அதாவது, கடன் கொடுக்கும் சாவகாரிகள், தங்கள் பெயர்களை ரிஜிஸ்டர் செய்துகொண்டு, சர்க்காரார் ஏற்படுத்தும் புத்தகங்களிலாவது, நமூனாக்களிலாவது, தங்கள் கணக்குகளைப் பதிவுசெய்துவரச் சம்மதித்தால், அவர்களுக்கும் சில அநுகூலங்கள் ஏற்படுத்துவது நலமென்று சிபார்சு செய்திருக்கிறார்கள். அவை யாவன:—விவசாய முறையிலாவது, கைத்தொழில் முறையிலாவது பயன்தரும் விஷயங்களுக்காகக் கொடுக்கப்பட்ட கடன்கள், வருஷத்துக்கு நூற்றுக்குப் 12-ரூபாய் வீதம் சாதாரண வட்டிக்குக் கொடுக்கப்பட்டிருந்தால், அவைகளை அதிகக் கஷ்டமில்லாமலே வசூல் செய்துகொள்ள அநுகூலங்கள் ஏற்படுத்தவேண்டும். ஆனாலும் கடன் வாங்கினவன், வாங்குங்காலத்தில் இந்தமாதிரி வசூலுக்கிணங்கி யேற்பாடுசெய்து கொண்டதாக இருந்தால்தான் இப்படிச்செய்யலாம் என்று சொல்லியிருக்கிறார்கள்.

## Puzzles.

## விடுகதைகள்.

### I. Riddles. விசித்திரக் கேள்விகள்.

1. எவ்விஷயத்தில் நாம் அரசனிற் பெரியோம்?
2. ஊசி எப்போது செவிடரை யொக்கும்?
3. எந்தப்பாத்தியில் முள்ளே முளைக்கும்?
4. எவ்விடத்தில் சுகத்தை எப்போதும் காணலாம்?
5. எந்த மானுக்குக் கொம்பு கிடையாது?
6. எந்தக்குட்டிக்கு வாலில்லை?

II.

1. கோழி குஞ்சு பொரிப்ப தெப்படி, தாழி நெய்யை எடுப்பதெப்படி?
2. பார்ப்பான் புத்தி படிப்ப தெப்படி, பணக்காரர் அரையில் உடுப்பதென்னது?
3. பாத்தி எப்படி நிறைவது, பசுவின் கன்றெப்படி முட்டுவது?
4. அக்கிரகாரம் எப்படி அழிவது, ஆனபயிர் எப்படிக் கெடுவது?
5. அரிசியை மாவாப் பண்ணுவ தெப்படி, தமர்கள்புத்தி சொல்லுவதெப்படி?

---

### III. BEHEADED WORD. தலைவெட்டு மொழி.

ஐந்தெழுத்தாலே ஆவேன் நானே,
நிந்தையில் பறவை யொன்றாவேனே,
தலையரிந்திடினும் குலைவெனக்கில்லை,
பின்னுமோர்ப் பெயராய்ப் பெரும்படையாயுதம்
தன்னைக்குறிப்பேன் சாற்றியவிரண்டாம்
எழுத்தைத் தள்ளினும் எனக்கிலை யேதம்,
வழுத்தெழில் தந்து வயங்குவனன்றே!

---

### IV. RIDDLES. விசித்திரக் கேள்விகள்.

1. மணிச்சிறப்பொன்றை மணிப்பொதுவோடே
அணைத்திடினன்றே அருமைகுலைந்து
ஒன்றுக்காகா மண்ணுட் கிழங்காய்
மருத்துவர்கையில் வருத்தமுற்றிடுமே.

2. முதலும் மூன்றும் உறுநிலைமாறின்
ஐந்நிலத்தொன்றா யிருந்தது மாறி
நால்வகைப்பொருட்கும் முதலாகும்மே.

---

### V. WORD SQUARE. சதுரக்கட்டு.

முதன்மொழி நமக்கு முன்னுறக்காணா
உறுப்பினையுணர்த்தும், உற்றவிரண்டு
பாகன் யானையின் படர் செவிபற்றி
ஈர்த்துச் செலுத்தும் இரும்படையாகும்,
மூன்றா மொழிதான் நீர் நிறை குண்டிகை,
ஆமிம் மூன்றும் அடைவின் அமைப்பின்
சதுர வுருவாயச் சமைந்திடுமென்றே.

---

VI. சூரியனுக்கு ஒளியில்லையென்று எப்படிச் சொல்லலாம்.

---

சென்ற செப்டம்பர்மாதத்துச் சஞ்சிகையில் உள்ள விடுகதைகளுக்கு விடை.

I. (a) 1. காயாமரத்தில்.
2. கண்டமாலை.
3. பாதாளம்.
4. தலையிலெழுத்து.

(b) 1. கண்ணும் காதும் ஒன்றாயிருத்தலால்.
2. சுகம் துக்கம் இரண்டையும் பொருந்தியிருத்தலால்.
3. கடல் நடுவிருத்தலால்.
4. இரவில் தோன்றுதலால்.
5. கசக்கும்போது.

(c) 1. காற்றாடி.
2. அரைச்சட்டை.
3. பூமிபடம்.

II. கோ கனகம். III. 1. வளையாபதி. 2. திருவல்லிக்கேணி.

IV. அகராதி.
கடிமரு.
ராமராமா.
திருமாது.

V. மன்னு முகமாறும் வரைப்புய மீராறுமாய்
என்னுளத்து நீங்காதிருப்போனைப்—பொன்னம்
பலவனுக்குப் பாங்கிற் பிறந்தானென் றென்றும்
நலமுடனே செப்புவனே நான்.

---

CURRENT NOTES.

## வர்த்தமானக்குறிப்புகள்.

---

பண்டிதர் ஷாமகாந்த் பன்னர்ஜி என்பவர் வங்காளதேசஸ்தர். இவர் புலிகளைப்பழக்கி ஆட்டுவிப்பதில் நிரம்ப வல்லவர். வங்காள வேங்கைகளையும் ஆப்பிரிக்க சிங்கங்களையும் பூனையைப்போலவும் நாயைப்போலவும் இணங்கி நடக்கும்படிச் செய்து காட்டி மகாதீரமுடையவர் என்று பலமுறையும் பேர்பெற்றவர். இவர் இப்போது துறவு பூண்டு காஷாயம் தரித்து இமயமலைக்குச் சென்று அங்கு தம் காலத்தை யோகப்பயிற்சியில் செலுத்த உத்தேசித்திருக்கின்றனராம்.

---

துருக்கி தேசத்தில் கிரிஸ்தவமத போதகியாய் மதப்பரசாரம் செய்துகொண்டிருந்த மிஸ். ஸ்டோன் என்னும் ஓர் அமெரிக மாதை தீவட்டிக் கொள்ளைக்காரர்கள் சிலர் பிடித்துக்கொண்டுபோய் வைத்து பெருந்தொகையான பணம் தமக்குக்கொடுத்தாலன்றி விடுதலை பண்ணமாட்டோமென்கிறார்களாம். இந்த அக்கிரமம் இருபதாம் நூற்றாண்டாகிய இக்காலத்திலும் நடக்குமாயின் என்னசொல்வது. இவளை விடுவிக்கும் பொருட்டு வேண்டிய

பணம் அமெரிகாதேசத்தில் சந்தாசெய்து சேகரித்தனுப்பியிருக்கிறார்களாம்.

---

தென் ஆப்பிரிக்காவில் போவர்கள் அடிபட்டு மிதிபட்டுச் சிதைபட்டுச் சிறைபட்டும் இன்னமும் தம் வலிமைக்கும் எதிரியின் வலிமைக்கும் தாரதம்மியம் அறியாதவர்களாய் போராடி வீணேமடிகிறார்கள்! இந்தயுத்தம் ஆரம்பித்து இரண்டு வருஷம் சென்று இது, மூன்றாம்வருஷம் சீனாதேசத்தில் இப்போதுதான் கலகமும் போரும் குழப்பமும் ஒருசாதி நீங்கியது. சயாம் தேசத்தில் பிரான்சுக்காரருக்கும் சயாமிகளுக்கும் யுத்தம் நேரிடும்போலிருக்கிறதாம். இப்படியிருக்க ஜப்பானியர்கள் கொரியாவை அபகரிக்கும்பொருட்டு ருஷ்யர்களோடு யுத்தத்துக்கு ஆயத்தம்செய்து வருகிறார்களாம். இச்சண்டை நேரிடுமாயின் இது மற்றெல்லாச் சண்டைகளிலும் மிகவும் உக்கிரமாகுமென்பது சொல்லத்தேவையில்லை. இச்சண்டைகளுக்கும் மற்சரங்களுக்கும் எப்போது இறுதியுண்டாமோ அறிந்திலேம்.

---

மைசூர் சமஸ்தானத்தில் சென்ற சென்ஸஸ் ஜனபாக் கணக்குப்படி ஜனத்தொகை 5,538,482 வரும்படி ரூ. 184,87,472, செலவு 179,79,417. காவேரி ஆற்றோட்டத்தை வேலைகளுக்குப்பலன் படுத்தும் ஏற்பாட்டில் செலவானது ரூ. 19,30,558. வித்தியாபிவிர்த்தி விஷயமாய்ச் செலவானது ரூ. 9,48,736. பொன்விளைவு 1,300 மணங்கு, அது பெறுமானவிலை 1,921,103 பவுன். அங்கு காலம்சென்ற ஸர். கே. சேஷாத்ரி அய்யரவர்களுக்குப்பின்பு இப்போது திவானாயிருப்பவர் மிஸ்டர். பி. என். கிருஷ்ணமூர்த்தி, ஸி. ஐ. இ. என்பவர். இவர் முன்பு ஹைதர், திப்பு முதலானோர்காலத்தில் பெயரோளாக மந்திரியாயிருந்து பேர்பெற்ற பூரணய்யர் என்பவரின் சந்ததி. அரசனுக்கு இன்னம்போதுமானவயது வாராமையால் தாயார் 'மஹாராணி ரிஜன்ட்' என்னும் பட்டத்தோடு ராஜ்யத்தை ஆண்டுவருகின்றனர். அரசருக்கு இன்னம் சில மாதங்களில் தாமே ஆளத்தக்கவயதுவரும்.

---

பஞ்சாபுக்கு வடமேற்கிலுள்ள சில நாடுகளை ஒன்றாகச்சேர்த்து வடமேற்கு எல்லை மாகாணம் (The north-west frontier province) என்னும்பெயரால் புதிதாக ஒரு பிரிவு ஏற்படுத்தத் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றது. இந்நாடுகள் இதுவரையில் பஞ்சாப் லெப்டினன்ட் கவர்னர் அவர்களின் கீழிருந்தன. இப்போது சீப்-கமிஷனரென்னும் உத்தியோகஸ்தரின்கீழ் வைக்கப்படும். இதுவரையில் இந்து மகாராஜ்யத்தில் 12-பிரிவுகள் இருந்தன. இப்போது பதின்மூன்றாகும்.

---

ஐக்கியமாகாணங்களின் அதிபதியாகிய 'மாகின்லி' என்பவரைக் கொரேமாகக் கொலைசெய்த பாதகன் பெயர் க்ழாலகோஸ். அவனுக்குச் சட்டப்படி மின்சாரச்சத்தியால் மரணம் அடையும்படி தண்டனை விதிக்கப்பட்டு இவ்வக்டோபர்மாதம் 28உ மரணமடைந்தான். தான் செய்த கொடுஞ்செயலில் தனக்குக் கூட்டாளி ஒருவருமில்லை யென்றும் தானொருவனே செய்ததாகவும் சொன்னான்.

---

மாகின்லி அவர்கள் தம்மாஸ்தியில் வருஷத்தில் 1,000-டாலர் தன் உடன்பிறந்தாளுக்குக் கொடுக்கும்படிக்கும் மற்றதெல்லாம் தம்மனையாள் அடையும்படிக்கும் எழுதிவைத்துப் போனாராம். அவருடைய ஆஸ்தி 2,25,000 முதல் 2,50,000 வரை டாலர் பெறுமாம். ஒருடாலர் கிட்டத்தட்ட ஒரு பூவராகனுக்குச்சமானமானது.

---

இவருக்குப்பின் ரூஸ்வெல்ட் என்பவர் அதிபதியாய் நியமிக்கப்பட்டிருக்கிறார். இவரை தனியே காவலின்றி ஓரிடத்துக்கும் போதல் கூடாதென்று புத்தி சொல்லியும் கேளாமல் நிர்ப்பயமாகத் தனியே சவாரிபோய்ச் சஞ்சரிக்கின்றனராம்.

---

ஹைதராபாத் இந்தியாவில் உள்ள சுதேச ராஜ்யங்கள் எல்லாவற்றிலும் பெரிது இதை ஆள்பவர் நிஜாம் என்னும் ஓர் மகம்மதிய அரசரென்பது பலருக்கும் தெரிந்தவிஷயமே. இவ்வரசர்க்கு முதன் மந்திரியாயிருந்தவரும், பிரசித்திபெற்ற ஸர். சாலர்ஜங் என்பவருக்குப் பின் மந்திரியாக வந்தவர்களில் மூன்றாவரும் ஆகிய ஸர். விகார் அல் உம்ரா என்பவர் வேலையைவிட்டு நீங்க அவர் தானத்தில் மஹாராஜா கிருஷ்ணப்பிரசாதென்பவர் முதன் மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இவர் 1857-ம்வருத்தில் நடந்த சிப்பாய்க்கலகத்துக்கு முன்னே 40-வருஷகாலம் ஐதராபாதில்முதன் மந்திரியாயிருந்த பேர்போன சந்துலால் என்பவரின் சந்ததியிற் பிறந்தவர். இவர் அரசிறை விஷயங்க

ளில் வல்லவர். இங்கிலீஷ் நன்ருகக்கற்றவர். நிஜா மின் நன்மையை மிகவும் கோரினவர். வயசும் அதிகம் ஆகவில்லை. இவர் ஆளுகையில் ஐதராபாத் மிக்க நன்மையும் பெருமையும் அடையுமென்றெண்ணத்தக்கது.

அனிபெஸன்டென்னும் பெண்மணியால் காசிநகரத்தில் இந்து மதாபிவிர்த்தியின் பொருட்டு மத்திய இந்துக் கல்விச்சாலை (The Central Hindu College) என்று ஓர் பாடசாலை ஏற்படுத்தப்பட்டுச் சென்ற மூன்றுவருஷமாய் நடந்துவருகின்றதல்லவா இதற்கு இதுவரையில் சேர்ந்திருக்கும் தொகை ரொக்கத்தில் இரண்டுலக்ஷத்திருபத்தோராயிரம் ரூபாயும், நிலபலங்களாக எழுபத்திராயிரம் ரூபாயுமாம். சென்றவருஷத்தில் இதற்கு ராஜகோட்டில் பாரிஸ்டராயிருக்கும் சிதாராம் நாராயணபண்டிதர் என்பவரால் 16,000-ரூபாயும், பரோடாவில் ஜட்ஜியாயிருந்த காட்கில் என்பவரால் 10,000-ரூபாயும் உபகாரமாக அளிக்கப்பட்டனவாம். காஸ்மீர மஹாராஜா இதனை ஆதரிப்பவர்களில் ஒருவராய் மாசம் ஒன்றுக்கு 500-ரூபாய் கொடுத்து வருவதன்றியும் பாடசாலைக் கட்டடத்திலும் சிறிதுபாகம் கட்டிக்கொடுத்திருக்கின்றனர். இவ்வித்யாசாலையினல் நமது நாட்டுக்கும் ஹிந்து மதத்துக்கும் விசேஷ நன்மையுண்டாகுமென்று எண்ணத்தக்கது.

சென்னை ராஜதானியில் வித்தியபரிபாலனத் தலைவராகிய மிஸ்டர் ஜி. ஹெச்சு. ஸ்டுவர்ட் என்வர்க்குப் புத்திரரும், போலீஸ் இலாகாவுக்குத் தலைவராகிய மிஸ்டர் ஹெச்சு. ஏ. ஸ்டுவர்ட் என்பவர்க்கு சகோதரபுத்திரருமாகிய ஜி. ஏ. டி. ஸ்டுவர்ட் என்பவர் இந்தியன் சிவில் ஸெர்விஸ் பரிக்ஷை (அதாவது கலெக்டர் முதலானவேலைகளுக் கருகமாகிய பரிக்ஷை)யில் தேறியிருக்கிருராம். ஹைகோர்டு ஜட்ஜியாகிய மூர் என்பவரின் புதல்வராகிய எம். ஸி. மூர் என்பவரும் இப்பரிக்ஷையில் இவ்வருஷம் தேரியிருக்கின்ருராம். இவருக்கு இதற்கு முன்னமே இரண்டு பிள்ளைகள் ஷை பரிக்ஷையில் தேறி இப்போது அநந்தப்பூர் வட ஆர்க்காடு என்னும் ஜில்லாக்களில் அஸிஸ்டண்டு கலெக்டர் வேலையில் இருக்கிருர்கள். இவர் பாக்கியமேபாக்கியம். தாயைப்போலிருக்கும் பிள்ளை, நூலைப்போலிருக்கும் சேலை என்னும் பழமொழி பொய்யாகுமா.

காப்பிக்கொட்டைக்குப்பதிலாக அதன் இலையைத் தேயிலைபோல சுமாத்ரா என்னும் தேசத்தில் உபயோகப்படுத்துகிருர்களாம். அத்தேசத்தில காப்பிக்கனிகளைப் பறிப்பாரில்லாமல் உதிர்ந்து விழுந்து மடிந்து போகின்றனவாம். காப்பி இலையில் கொட்டையில் உள்ள வீரியமேயன்றி இன்னம் சிலகுணங்கள் விசேஷமாகக் கூட இருக்கின்றனவாம். கொட்டைக்குப்பதில் இலை வழக்கத்துக்கு வரும் பக்ஷத்தில் காப்பி மிகவும் மலிந்து போகுமென்பதில் சந்தேகம் இல்லை. இலைக்காகப் பயிர் செய்யும் பக்ஷத்தில் காப்பிச்செடியை இன்னமண் தான் பிடிக்குமென்றில்லாமல் எங்குவேண்டுமானாலும் ஏராளமாகப் பயிர்செய்யலாம்.

பஞ்சாபுக்கும் அப்கானிஸ்தானத்துக்கும் இடையில் உள்ள நாடுகளை யெல்லாம் ஒருமிக்கச் சேர்த்து வடமேற்கு எல்லை மாகாணம் என்று பெயர் தந்து புதிதாக ஏற்படுத்தி அதற்கு முக்கிய கமிஷனர் என்னும் உத்தியோகஸ்தரை நியமிக்கும்படியாய்த் தீர்மானிக்கப்பட்டு இந்த நவம்பர்மீ 9உ முதல் இது அமலுக்கு வந்திருக்கிறது. ஆகவே இந்திய மஹாராஜ்யத்தில் பர்மாவடக்கம் 12-பிரிவுகள் ஏற்படுகின்றன. அவற்றுள் இரண்டு கவர்னராலும், நான்கு லெப்டினண்டு கவர்னராலும், ஆறு முக்கிய கமிஷனர்களாலும் ஆளப்படுவன.

## சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

### கிளியும் காக்கையும்.

முன்னெருகாலத்தில் ஒரு கிளியும் காக்கையும் ஒரேகூட்டில் அடைக்கப்பட்டிருந்தன. கிளி காக்கையின் விரூபத்தைக்கண்டு வெறுப்படைந்து, "இது என்ன அவலக்ஷணமான ரூபம்! எவ்வளவு வெறுக்கத்தக்கவடிவம்! இதன் முகத்தில் விழித்தலும் பாபம்! இதன்

நடத்தையும் செய்கையும் எனக்குச்சிறிதும் பிடிக்கவில்லையே! ஓ கட்டைக்கரிபோலும் மட்டிக்காகமே! உன்னையும் என்னையும், நான் என்னபாவம் செய்தேனே, ஓரேகூட்டிலடைத்துவைத்தார்கள்! உனக்கும் எனக்கும் இடையே கிழக்குக்கும் மேற்குக்கும் உள்ள தொலையாத்தூரம் இருந்ததாயின் எவ்வளவு சந்தோஷிப்பேன்! காலையில் தூங்கியெழுந்ததும் உன்முகத்தில் ஒருவன் விழிப்பானாயின், அவனுக்கன்று சஞ்சலமும் துன்பமுமேயன்றிச் சந்தோஷமென்பது ஓடியொளித்துவிடுமே! உன்னைப்போல மகாபாபியொருவனேடுன்னைச் சேர்த்துவைத்தால் உசிதமாயிருக்கும். ஆயினும், உன்னைப்போல் பாபி உலகத்தில் யாவர்?" என்று வெறுப்போடு சொல்லி நிந்தித்தது.

இதுதான் இப்படிச்சொல்லி நிந்தித்ததென்றால், காக்கைக்கு இதன்பாலுண்டான வெறுப்புக்கோ அளவில்லை! அக்காக்கை தன் விதியை நொந்துகொண்டு மிக்க துயரோடு, "ஐயோ என் எழுத்தை ஆருடன் சொல்வேன்? என்னபாபம் பண்ணினேனே என்னைச் சிறையிலடைத்தது மல்லாமல் இந்த அறிவில்லா மூடத்துடன் ஒரேகூட்டில் வைத்தடைத்தார்கள்! இதன் சகவாசம் எப்போது நீங்குமோ?" என்று வருந்தியது.

பிள்ளைகளே! இந்தக்கதையினால் நாம் தெரிந்துகொள்வது யாதென்னில், உலகத்தில் அறிவில்லாமூடர்களை அறிவுடையோர் சேருதற்கஞ்சி இகழ்வதைக்காட்டிலும், அறிவுடையோர்களை மூடர்கள் ஆயிரம்பங்கு அதிகமாக இகழ்ந்து வெறுப்பார்கள். இவ்விஷயமாக ஞானத்திரளாகிய ஔவையார்பாடியுள்ள பாட்டு உங்கள்ஞாபகத்தில் இருக்குமல்லவா?

"நற்றாமரைக்கயத்து நல்லன்னம் சேர்ந்தாற்போற்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர் கற்பில்லா
மூர்க்கரை மூர்க்கருகப்பர் முதுகாட்டிற்
காக்கையுகக்கும் பிணம்."

என்று எவ்வளவு நன்றாகச்சொல்லியிருக்கின்றார்! கற்றாரைக்கற்றாரும், மூர்க்கரை மூர்க்கரும் இச்சித்தலன்றி கற்றறிந்தவர்களுக்கும் கல்லாமூடர்களுக்கும் ஒருநாளும் ஒட்டும் உறவுமுண்டாகமாட்டாது. இவ்வுண்மையையறிந்து நீங்களும் கற்றுப் புத்திமான்களாகி உங்கள் தங்கை தமக்கைகளாகிய பெண்பாலார்க்கும் கல்வியைப்போதியுங்கள். அப்போது தான் உங்களிடத்தில் அவர்களுக்கு விசேஷ அன்பும் அநுராகமும் உண்டாகும்.

---

## Notice to Subscribers.

**Subscribers to the Viveka Chintamani are earnestly requested to remit their subscriptions in advance before 30th June. All subscriptions that remain unpaid after that date will be collected at the usual rate of Rs. 4.**

---

## சந்தாதாரர்களுக்கு அறிக்கை.

சந்தாதாரர்கள் எல்லோரும் ஜூன்மீ 30உக்குள் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேணுமென்று கேட்டுக்கொள்கிறோம். அத்தேதியிலிருந்து பாக்கிநிற்கும் சந்தாக்கள் வழக்கமாயுள்ள ரூ. 4 விகிதம் வசூல் செய்யப்படும். முன்பணமனுப்பத் தாமதிப்பதால் பத்திரிகை வெளியாவதும், தாமதப்படுவதால் எல்லோரும் சந்தாவை முன்பணமாகவே அனுப்பிவிடவேணுமாய் மிக வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

அ. ப். ஏஜன்ஸி,
காரியதரிசி.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கிலீஷ் பைண்டு செய்து கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

**மாட்சிமைதங்கிய இந்தியா சக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம்.** 27-படங்களோடும், இந்தியா கவர்ன்மெண்டு, 'இந்தியா ஆபீஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலுத்தும் முறை விவரங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 1-4. V. P. P. ரூ. 1-8. அதிக கில்ட்கொடுத்தது ரூ. 1-6. V.P.P. ரூ. 1-10.

**புத்தாது திவ்விய சரித்திரம்.**—விலை அணா 14. V. P. P. ரூ. 1-2. அதிககில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. மூலமாக ரூ. 1-4.

**விவேகமஞ்சரி.**—புஸ்தகம் I. இதிலடங்கியவை : (1) கோல்பர்ட்சரித்திரம். (2) சத்தியதேவதைக்கதை. (3). சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணா 14. V. P. P. ரூ. 1-2. அதிக கில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. ரூ. 1-4.

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகளின்றி காலிகோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடைக்கும் :

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாபாரிகடையிலிருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவந்த வாலிபன்கதை. விலை அணா 5. V. P. P. அணா 8.

(2) சத்தியதேவதைகதை : விலை அணா 5. V. P. P. மூலமாக அணா 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை அணா 6. V. P. P. மூலமாக அணா 9.

**ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்.** விலை ரூ. 1-8. V. P. P. ரூ. 1-14. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. V. P. P. ரூ. 2-2.

**விவேகரஸத்தாலாட்டு.** 6 பை. தபாற்கூலி 6 பை.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி **அ. ப.** ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### கமிஷனுக்கு விற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| மாலதிமாதவம் | ... | ... | விலை அணா 5. |
| தினதயாளு... | ... | ... | ,, ,, 8. |
| கல்வி விளக்கம் | ... | | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madras.*

# FOLKLORE IN SOUTHERN INDIA

## IN ENGLISH

By Pandit S. M. NATESA SASTRI, B.A.,

*Member of the London Folklore Society.*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Part I. | Re. 1 | 0 | Part III. | Rs. 1 | 8 |
| ,, II. | Re. 0 | 8 | ,, IV. | Rs. 2 | 0 |

*Or Rs. 5 a Set. Postage and V. P. charges extra.*

**Only a few sets available.**

**Don't miss this opportunity to secure a rare work which is now out of print.**

*Apply sharp to the Secretary, D. K. Agency, Triplicane.*

---

THE

# GOSPEL OF BUDHA:

BY

## PAUL CARUS.

**Paper cover: Price Rs. 1-8.**

**By V. P. post Rs. 1-14.**

Only a few copies on hand.

***Apply sharp to the Secretary,***

D. K. AGENCY,

*Triplicane,*

**Madras.**

VOL. X.] DECEMBER, 1901. [No 8.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் ✢ பரவச்செய்வதற்கான ✢ மாதாந்தரத் ✢ தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,
Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,
MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.]  [Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: VANI VILAS, TRIPLICANE.

PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO., POPHAM HOUSE, BROADWAY.

---

### NOTICE.

The Editor of this Journal who has just recovered from a long and tedious illness being compelled under medical advice to take 6 months' complete rest, the conduct of this Journal has been entrusted to a valued friend, who will carry it on, on the same lines as hithertofore. All literary contributions to be addressed merely "To the Editor" without any name.

1st November 1901.

---

### விளம்பரம்.

இப்பத்திரிகையின் ஆசிரியர் நீடித்து காயலாவாகவிருந்து இப்பொழுதுதான் அனுகூலப்பட்டிருக்கிறார். இன்னும் 6-மாசத்துக்கு யாதொருவேலையும் செய்யக்கூடாதென்று டாக்டர் சொல்லுவதால், இப்பத்திரிகையை நடத்தும் வேலை, நமது அரிய நண்பர் ஒருவர்வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. அவர் எப்போதும்போல் இப்பத்திரிகையை நடத்திவருவார். விஷயங்கள் எழுதியனுப்புவோர் "பத்திராசிரியருக்கு" என்று வேறுபேர் குறிக்காமல் விலாசம் எழுதவேண்டும்.

1901-௵ நவம்பர்௴ 1௳.